# التحذير من الشرك والقصائد الشركية والمواليد البدعية

# இணைவைப்பைப் போதிக்கும்

# மௌலித் பாடல்கள்


محمد رضوان محمد جنيد

(خريج كلية الحديث الشريف والدراسات الإسلامية بالمدينة المنورة)

அஷ்ஷைக் எம்.ஜே.எம். ரிஸ்வான் மதனி M.A. (Cey)

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | :- | இணைவைப்பைப் போதிக்கும் மௌலித் பாடல்கள் |
| தொகுப்பு | :- | எம்.ஜே.எம். ரிஸ்வான் (மதனி) |
| பதிப்புரிமை | :- | ஆசிரியருக்கே |
| பக்கங்கள் | :- | 156 |
| அச்சிட்டோர் | :- | எம். இஸட். முஹம்மத் |
| முதல் பதிப்பு | :- | 01 - 01 - 2018 (1000 பிரதிகள்) |
| வெளியீடு | :- | ஸஹாபா பப்ளிகேஷன் |

# பொருளடக்கம்

# முன்னுரை

புகழ் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே சொந்தமானது. அவனது அருளும், சாந்தியும் அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தவர்கள், தோழர்கள், ஸஹாபாப் பெண்மணிகள், இமாம்கள், நல்லடியார்கள், மற்றும் இறை விசுவாசத்தோடு உலகைப்பிரிந்து மண்ணறைகளில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற முஸ்லிமான சகோதர, சகோதரிகள் அனைவர் மீதும் நிலையாக உண்டாகட்டுமாக!

மதிப்புக்குரிய இஸ்லாமிய சகோதரர்களே! இஸ்லாமிய மாதங்களின் தொடரில் ***"ரபீஉல் அவ்வல்"*** மாதம் மூன்றாவது மாதமாக இடம் பெறுகின்றது, இம்மாதத்தில் இறுதித்தூதர் நம் தலைவர் முஹம்மத் صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் மக்கா நகரில் பிறந்து, தனது அறுபத்தி மூன்றாவது வயதில் மதீனா நகரில் வாழ்ந்த நிலையில் அதே மாதத்திலேயே இவ்வுலகுக்கு விடை கொடுத்தார்கள்.

மாமனிதர் முஹம்மத் நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் பிறந்த தினத்தை முன்னிட்டு நமது பிரதேசங்களில் ***"மௌலித் மற்றும் திக்ர் மஜ்லிஸ், ஸலவாத் மஜ்லிஸ்"*** வைபங்கள் பல கோலாகலமாக ஏற்பாடு செய்யப்பட்டு அதற்காக அரசியல் பிரமுகர்கள் முதல் சாதாரண பிரஜை வரை அழைக்கப்பட்டு மிக விமர்சையாகக் கொண்டாடுவதை நாம் அறிவோம்.

எனவே இம்மாதத்தில் பக்திப் பரவசத்தோடு மேற்கொள்ளப்படுகின்ற குறிப்பாக "*மீலாத் விழா*" விற்கும் ***மவ்லித் பாடல்களுக்கும்*** நபிகள் நாயகம் ﷺ அவர்களின் வழி முறைக்கும் இடையில் காணப்படும் தொடர்பு பற்றியும், அவற்றில் மலிந்து காணப்படும் இணைவைப்புக்கள் பற்றியும் "காய்தல்" "உவர்தல் இன்றி" நடுநிலையுடன் அல்குர்ஆன், அஸ்ஸுன்னா, மற்றும் நல்லறிஞர்களான இமாம்களின் கூற்றுக்கள், இஸ்லாமிய வரலாற்று அடிப்படைகள் போன்ற ஆதாரங்களை முன்நிறுத்தி ஆய்வு செய்வது காலத்தின் தேவையாக இருக்கின்றது.

அந்த அடிப்படையில் மவ்லித் பாடல்கள், மீலாத் கொண்டாட்டங்கள் புர்தாப் பாடல்கள், அதற்காக அரங்கேறும் கந்தூரிகள், சடங்கு சம்பிரதாய நிகழ்வுகள் என்பன நபிவழியைச் சார்ந்ததா? இல்லையா? என்பதை முடிவு செய்வதற்கு முன் அல்-குர்ஆனிலிருந்தும், நபிகள் நாயகம் ﷺ அவர்களின் பொன் மொழிகளிலிருந்தும் இஸ்லாத்தைக் கற்றறிந்த பேரறிஞர்களான இமாம்களின் தீர்ப்புகளில் இருந்தும் அடிப்படையான சில விதிகளை முன்வைக்கின்றோம்.

அவைகளுக்கு அமைவாக மேற்படி வழிமுறைகள் அமையப்பெற்றிருக்கின்றனவா? இல்லையா? என்பதை உரசி ஒப்பிட்டுப் பாருங்கள். மிகவிரைவில் குழப்பங்கள் அகன்று, சத்தியம் மலரும். "***இன்ஷா அல்லாஹ்***"

இந்த நூலை வெளியிட பண உதவி செய்த மதிப்புக்குரிய அஷ்ஷைக் அபூ அப்தில் மஜீத், மற்றும் அஷ்ஷைக் சுல்தான் அல்அம்ரி, சுப்ஹான மவ்லித் கவிதைகளைத் தந்துதவிய சகோதரர் ஸாபித் ஷரயி, எல்லா நிலைகளிலும் எனக்குப் பூரண ஒத்துழைப்பு நல்கிய எனது மனைவி, பாசத்திற்குரிய பிள்ளைகள், எனது அறிவுக் கல்லூரிகள், மதீனா இஸ்லாமிய சர்வதேச பல்கலைக்கழக, பேராதெனிய பல்கலைக்கழக விரிவுரையாளர்கள், எனது ஆசான்கள் அனைவருக்கும், இந்நூலை சிறப்பாக அச்சிட்டு வெளியிட உதவிய எம். இஸட். முஹம்மத் அவர்களுக்கும் பூரண உடல் ஆரோக்கியத்திற்காகவும், சீரான வாழ்விற்காகவும் அல்லாஹ்விடம் என்றும் பிரார்த்தனை செய்கின்றேன்.

இந்நூலை வெளியிட பூரண ஆரோக்கியத்தைத் தந்த அல்லாஹ்வை மீண்டும் மனமாறப் புகழ்கின்றேன்.

இஸ்லாமிய ஊழியன்

**எம். ஜே. எம். ரிஸ்வான் மதனி (M.A. Cey)**

...ٱلۡيَوۡمَ أَكۡمَلۡتُ لَكُمۡ دِينَكُمۡ وَأَتۡمَمۡتُ عَلَيۡكُمۡ نِعۡمَتِي وَرَضِيتُ لَكُمُ ٱلۡإِسۡلَٰمَ دِينٗاۚ

فَمَنِ ٱضۡطُرَّ فِي مَخۡمَصَةٍ غَيۡرَ مُتَجَانِفٖ لِّإِثۡمٖ فَإِنَّ ٱللَّهَ غَفُورٞ رَّحِيمٞ ٣

﴿المائدة: ٣﴾

“இன்றைய தினம் உங்களது மார்க்கத்தை உங்களுக்காகப் பூரணப்படுத்தி விட்டேன், எனது அருட்கொடையை உங்களுக்கு முழுமைப்படுத்தியும் விட்டேன். இஸ்லாத்தை உங்களுக்கான (பொது) மார்க்கமாகவும் பொருந்திக் கொண்டேன்.”

(அல்மாயிதா: 3)

رَبَّنَا ٱغۡفِرۡ لِي وَلِوَٰلِدَيَّ وَلِلۡمُؤۡمِنِينَ يَوۡمَ يَقُومُ ٱلۡحِسَابُ ٤١

﴿ إبراهيم: ٤١﴾

“அல்லாஹ்வே! எனக்கும் எனது பெற்றோருக்கும் இறைவிசுவாசிகளான மு.்.மின்களுக்கும் கேள்வி கணக்கு நாளில் பாவப் பிழைகளைப் பொறுத்-தருள்வாயாக!”

(இப்றாஹீம்: 41)

# மௌலித் என்பதன் பொருள் என்ன?

அரபியில் மௌலித் நபவி என்பது அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் ﷺ அவர்கள் பிறந்த இடம் மற்றும் காலத்தைக் குறிக்கும் பொதுவான கருத்தைக் குறிக்கும்.

நபி ﷺ அவர்கள் பிறந்த இடமாக மக்காவில் தாரு அபீ யூசு.்.ப் என ஜாஹிலிய்யாக் காலத்தில் அறியப்பட்ட இடத்தைக் குறிக்கும். அது தற்போது புனித மக்காவில் பொது நூலகம் அமைந்துள்ள இடமாகும்.

அவர்கள் பிறந்த நேரம் அல்லது காலம் என்பது யானை ஆண்டு வருடம் ஒரு ரபீவுல் அவ்வல் மாதம் பிறை பன்னிரெண்டு என்பது வரலாற்று ஆய்வாளர்கள் மத்தயில் காணப்படும் முரண்பாடான கருத்துக்களில் சரியான கருத்தாக இருக்கலாம்.

பெரும்பாலான அறிஞர்களின் கணிப்பின் அடிப்படையில் நபி ﷺ அவர்கள் *ஒரு ரபிஉல் அவ்வல் திங்கட்கிழமை (ஆகஸ்ட்) மாதத்தில் கி. பி. 570ம் ஆண்டு பிறந்ததாக குறிப்பிடுகின்றார்கள். சிலர் கி. பி. 571ம் ஆண்டு பிறந்ததாக குறிப்பிடுகின்றனர்.*

## மார்க்கம் முழுமைப்படுத்தப்பட்டுள்ளது

நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தனது இருபத்தி மூன்று வருட நபித்துவக் காலத்தில் கழிவறை ஒழுக்கங்கள் முதல் ஆட்சி முறை வரை தமது

தோழர்களுக்கு கற்றுக்கொடுக்காது இந்த உலகைப் பிரியவில்லை என்பதை பின்வரும் நபி மொழி உறுதி செய்கின்றது.

عَنْ سَلْمَانَ قَالَ قِيلَ لَهُ قَدْ عَلَّمَكُمْ نَبِيُّكُمْ صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كُلَّ شَيْءٍ حَتَّى الْخِرَاءَةَ قَالَ فَقَالَ أَجَلْ لَقَدْ نَهَانَا أَنْ نَسْتَقْبِلَ الْقِبْلَةَ لِغَائِطٍ أَوْ بَوْلٍ أَوْ أَنْ نَسْتَنْجِيَ بِالْيَمِينِ أَوْ أَنْ نَسْتَنْجِيَ بِأَقَلَّ مِنْ ثَلَاثَةِ أَحْجَارٍ أَوْ أَنْ نَسْتَنْجِيَ بِرَجِيعٍ أَوْ بِعَظْمٍ (مسلم/برقم: ٢٦٢)

ஒரு மாற்றுமதத்தவர் ஸல்மான் رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களிடம் உங்கள் நபிகள் நாயகம் صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் (மல சல ஒழுங்குகள் போன்ற) அற்பமான காரியங்களைக் கூட உங்களுக்கு கற்றுத்தந்துள்ளார்களே! என வினவியபோது அவர், ஆமாம்! (உண்மைதான்). நாம் மல சலம் கழிக்கின்ற போது கிப்லாத் திசையை முன்னோக்குவது கழிவறையை அகற்றுவதற்காக வலதை உபயோகிப்பது, மூன்று கற்களைவிட குறைவானவற்றில் சுத்தம் செய்வது காய்ந்த விட்டையினாலோ, அல்லது எலும்பினாலோ (மலம் அல்லது சலத்தை) சுத்தம் செய்வது ஆகியவற்றில் இருந்து எம்மை தடுத்துள்ளார்கள். (அது பற்றி பெருமைப்படுகிறோம்) என பதிலளித்தார்கள். *(முஸ்லிம்)*

இஸ்லாத்தில் எவரும் தமது விருப்பு, வெறுப்புக்களை புகுத்தி விடாத வண்ணம் கழிவறை ஒழுக்கங்களையே கற்றுக் கொடுத்த நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் மீலாத் விழா பற்றி தனது தோழர்களுக்குக் கற்றுக் கொடுக்காது

மௌனமாக இருந்திருப்பார்களா? அவ்வாறு கற்றுக் கொடுக்கப்பட்டிருக்குமாயின் மனிதர்களால் அசிங்கமாகக் கருதப்படும் கழிவறை ஒழுக்கங்கள் பற்றி அறிவித்த நபித்தோழர்கள் மீலாத் விழா பற்றி அறிவிக்கா-திருந்திருப்பார்களா? என சிந்திக்க வேண்டும்.

ஒட்டுமொத்த நபித்தோழர்களும் இந்த வழிமுறை தொடர்பாக எதையும் பேசாதவர்களாக மௌனம் காத்திருப்பதைப் பார்க்கின்ற போது இந்த வழிமுறை புதிய ஒன்றுதான் என்பதை உணர்த்தப் போதுமான-தாகும்.

அர.ஃபாத் திடலில் நபித்தோழர்களை ஒன்று சேர்த்து உரையாற்றிய நபிகள் நாயகம் ﷺ அவர்கள் :

وَقَدْ تَرَكْتُ فِيكُمْ مَا لَنْ تَضِلُّوا بَعْدَهُ إِنِ اعْتَصَمْتُمْ بِهِ كِتَابَ اللهِ. وَأَنْتُمْ تُسْأَلُونَ عَنِّى فَمَا أَنْتُمْ قَائِلُونَ » . قَالُوا نَشْهَدُ أَنَّكَ قَدْ بَلَّغْتَ وَأَدَّيْتَ وَنَصَحْتَ. فَقَالَ بِإِصْبَعِهِ السَّبَّابَةِ يَرْفَعُهَا إِلَى السَّمَاءِ وَيَنْكُتُهَا إِلَى النَّاسِ « اللَّهُمَّ اشْهَدِ اللَّهُمَّ اشْهَدْ ». ثَلاَثَ مَرَّاتٍ (صحيح مسلم : ٣٠٠٩)

நான் உங்களிடம் ஒன்றை விட்டுச் செல்கின்றேன். அதனை நீங்கள் நன்றாகப் பற்றிக் கொண்டால் வழிதவறமாட்டீர்கள். அது, அல்லாஹ்வின் வேதம் எனக் குறிப்பிட்ட பின்னால் நீங்கள் மறுமையில் என்னைப் பற்றி (அல்லாஹ்வால்) விசாரணை செய்யப்பட இருக்கின்றீர்கள் அப்போது என்ன சொல்வீர்கள் எனக் கேட்டார்கள். அதற்கு நபித்தோழர்கள் நீங்கள் நேர்த்தியாக எத்திவைத்தீர்கள், உங்கள் பணியை

சரியாக நிறைவேற்றினீர்கள், உபதேசித்தும் நடந்தீர்கள் என்று நாம் சாட்சி கூறுவோம் எனப் பதில் கூறினார்கள். உடனே நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தமது ஆட்காட்டி விரலை வானின் பக்கமாக உயர்த்தி, பின்னர் மக்களின் பக்கமாகக் சைகை காட்டியவர்களாக, அல்லாஹ்வே நீ சாட்சியாக இரு! அல்லாஹ்வே நீ சாட்சியாக இரு! அல்லாஹ்வே நீ சாட்சியாக இரு! என மூன்று தடவைகள் குறிப்பிட்டார்கள் என இமாம் முஸ்லிம் رَحِمَهُ ٱللَّهُ அவர்களின் கிரந்தத்தில் இடம் பெறும் செய்திக் குறிப்பில் காண்கின்றோம்.

புகாரியில் இடம் பெறும் மற்றொரு அறிவிப்பில், தனக்குப் பின்னால் வரவிருக்கும் குழப்பங்களின் போது சண்டை சர்ச்சைகளில் ஈடுபட்டு ஒருவரை மற்றவர் கொலை செய்கின்ற நிலை வரக் கூடாது எனக் கூறிய தொடரில்

ألا هل بلغت "கவனியுங்கள்! எனது தூதுத்துவப்பணியை உங்களுக்கு அறிவித்து விட்டேனா?" எனக் கேட்ட போது: ஆம் அல்லாஹ்வின் தூதரே! என ஒட்டு மொத்த நபித்தோழர்களும் பதில் கூறினார்கள் என இடம் பெற்றுள்ளதைப் பார்க்கின்றோம். (புகாரி)

## மார்க்கம் முழுமைப் படுத்தப்பட்டமைக்கான சான்றுகள்

நபிகள் நாயகம் ﷺ அவர்கள் பிற்காலத்தில் உருவெடுக்கும் குழப்பங்கள் கொடியவன் தஜ்ஜால்,

மற்றும் மறுமை சார்ந்த பல அடையாளங்களை மிகத்துல்லியமாக சுட்டிக்காட்டிய அதே நேரத்தில், மீலாத் கொண்டாட்டம்பற்றிக் கூறாது விட்டிருப்பார்களா? என சிந்தித்தால் மார்க்கம் முழுமைப்படுத்தப்பட்டுள்ளதை இலகுவாக உறுதி செய்ய முடியும்.

இஸ்லாமிய மார்க்கம் முழுமைப்படுத்தப்பட்டுள்ளதை அல்லாஹ் தனது திருமறையில் உறுதி செய்கின்றான். அதனை நபிகள் நாயகம் ﷺ அவர்களும், நபித்தோழர்களும் இமாம்களும் உறுதி செய்துள்ள அதேநேரம், மார்க்கத்தில் புதுமைகளைப் புகுத்தி அவற்றை நல்லவைகள் எனக் காண்பதை எச்சரிக்கை செய்தும் இருக்கின்றனர்.

எனவே ஒரு முஸ்லிம் அது பற்றிய தெளிவான அறிவுள்ளவனாக இருக்க வேண்டும். இல்லாத போது நிச்சமயாக நபி ﷺ அவர்களின் மரணத்தின் பின்னால் வந்தவர்களாரால், அல்லது ஷீஆக்கள், காதியானிகள், வழிகெட்ட சூபிகள் போன்ற அதன் உள்ளக எதிரிகளால் இஸ்லாத்தில் புகுத்தப்படும் புதுப் புது நடைமுறைகளுக்கு இவனும் அடிமையாகுவான் என்பதில் சந்தேகம் கிடையாது.

أَمْ لَهُمْ شُرَكَٰٓؤُا۟ شَرَعُوا۟ لَهُم مِّنَ ٱلدِّينِ مَا لَمْ يَأْذَنۢ بِهِ ٱللَّهُ ... ﴿٢١﴾

﴿ الشورى: ٢١﴾

***அல்லது அல்லாஹ் அனுமதிக்காததை மார்க்கமாக்கி வைக்கக்கூடிய இணை (தெய்வங்கள் அவர்களுக்கு இருக்கின்றனரா?*** *(அஷ்ஷூரா: 21)*

قُلْ أَتُعَلِّمُونَ ٱللَّهَ بِدِينِكُمْ .... ﴿١٦﴾ ﴿الحجرات: ١٦﴾

உங்கள் மார்க்க (வழிபாடுகள்) பற்றி அல்லாஹ்வுக்கு நீங்கள் கற்பிக்கின்றீர்களா? (அல்ஹுஜ்ராத்: 16)

...ٱلْيَوْمَ أَكْمَلْتُ لَكُمْ دِينَكُمْ وَأَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِي وَرَضِيتُ لَكُمُ ٱلْإِسْلَٰمَ دِينًا ۚ فَمَنِ ٱضْطُرَّ فِى مَخْمَصَةٍ غَيْرَ مُتَجَانِفٍ لِّإِثْمٍ ۙ فَإِنَّ ٱللَّهَ غَفُورٌ رَّحِيمٌ ﴿٣﴾ ﴿المائدة: ٣﴾

இன்றைய தினம் உங்களது மார்க்கத்தை உங்களுக்காகப் பூரணப்படுத்தி விட்டேன், எனது அருட்கொடையை உங்களுக்கு முழுமைப்படுத்தியும் விட்டேன். இஸ்லாத்தை உங்களுக்கான (பொது) மார்க்கமாகவும் பொருந்திக் கொண்டேன்.

(அல்மாயிதா: 3)

இந்த வசனத்தை அறிந்திருந்த ஒரு யூதர் இரண்டாம் கலீ∴பா உமர் رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்களிடம் வந்து

عَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ أَنَّ رَجُلًا مِنْ الْيَهُودِ قَالَ لَهُ يَا أَمِيرَ الْمُؤْمِنِينَ آيَةٌ فِي كِتَابِكُمْ تَقْرَءُونَهَا لَوْ عَلَيْنَا مَعْشَرَ الْيَهُودِ نَزَلَتْ لَاتَّخَذْنَا ذَلِكَ الْيَوْمَ عِيدًا قَالَ أَيُّ آيَةٍ قَالَ الْيَوْمَ أَكْمَلْتُ لَكُمْ دِينَكُمْ وَأَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِي وَرَضِيتُ لَكُمْ الْإِسْلَامَ دِينًا قَالَ عُمَرُ قَدْ عَرَفْنَا ذَلِكَ الْيَوْمَ وَالْمَكَانَ الَّذِي نَزَلَتْ فِيهِ عَلَى النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَهُوَ قَائِمٌ بِعَرَفَةَ يَوْمَ جُمُعَةٍ.

(صحيح البخاري)

அமீருல் மு.ஃ.மினீன் அவர்களே! உங்கள் வேதத்தில் ஒரு வசனத்தை நீங்கள் ஓதி வருகின்றீர்கள். அது யூதர்களாகிய எங்கள் மீது (மட்டும்) இறக்கப்பட்டிருக்-குமானால் அந்த தினத்தை பெருநாள் தினமாக எடுத்திருப்போம் என்றார். அது என்ன வசனம் என உமர் رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்கள் கேட்ட போது, ***இன்றைய தினம் உங்களது மார்க்கத்தைப் பூரணப்படுத்தி எனது அருட் கொடையை முழுமைப்படுத்தி இஸ்லாத்தை மார்க்கமாகப் பொருந்திக் கொண்டேன். (5:3)*** என்ற பொருளுடைய வசனம் எனக் கூறினார். அதற்கு அந்த நாளையும், அது இறக்கப்படட்ட இடத்தையும் நாம் அறிவோம் எனக் கூறிய உமர் رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்கள் "நபிகள் நாயகம் ﷺ அவர்கள் அர.ஃ.பாத் திடலில் நின்று கொண்டிருந்த போது ஒரு ஜும்ஆத்தினத்தில் அவர்கள் மீது குறித்த வசனம் இறங்கியது எனப் பதிலளித்தார்கள். (புகாரி)

நபி ﷺ அவர்கள் தமது மரண வேளையிலும் கூட இந்த சமுதாயத்திற்கு உபதேசிக்க வேண்டிய கட்டளைகளை உபதேசித்தே இருந்தார்கள். அதில் அவர்கள் தமது சமூகத்திற்கு எவ்வித குறையும் செய்யவில்லை.

عَنِ ابْنِ عَبَّاسٍ قَالَ : لَمَّا اشْتَدَّ بِالنَّبِيِّ ﷺ وَجَعُهُ قَالَ ائْتُونِي بِكِتَابٍ أَكْتُبُ لَكُمْ كِتَابًا لاَ تَضِلُّوا بَعْدَهُ قَالَ عُمَرُ إِنَّ النَّبِيَّ ﷺ غَلَبَهُ

الْوَجَعُ وَعِنْدَنَا كِتَابُ اللهِ حَسْبُنَا فَاخْتَلَفُوا وَكَثُرَ اللَّغَطُ قَالَ قُومُوا عَنِّي، وَلاَ يَنْبَغِي عِنْدِي التَّنَازُعُ فَخَرَجَ ابْنُ عَبَّاسٍ يَقُولُ : إِنَّ الرَّزِيَّةَ كُلَّ الرَّزِيَّةِ مَا حَالَ بَيْنَ رَسُولِ اللهِ صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَبَيْنَ كِتَابِهِ. (صحيح البخاري)

நபி ﷺ அவர்களுக்கு (இறுதி நேர) வலி கடுமையான போது என்னிடம் ஒரு ஏட்டை கொண்டுவாருங்கள், (எழுத்தர் ஒருவர் மூலம்) உங்களுக்கு நான் கட்டளைக்கான ஏடு ஒன்றை எழுதித்தருகின்றேன். அதற்குப் பின் நீங்கள் வழிதவற-மாட்டீர்கள் எனக் கூறினார்கள். உடனே, உமர் رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்கள் அல்லாஹ்வின் தூதருக்கு வலி கடுமையாகி-விட்டது. நம்மிடம் அல்லாஹ்வின் வேதம் இருக்கின்றது-தானே (அப்படி இருக்க நாம் வழிதவற வாய்ப்பில்லையே) எனக் கூறிய போது கூச்சல் சப்பதம் அதிகரித்தது. அப்போது நபி ﷺ அவர்கள் எனது இடத்தில் இருந்து நீங்கள் அனைவரும் எழுந்து செல்லுங்கள். என்னிடம் நீங்கள் சர்ச்சை செய்து கொண்டிருப்பது அவசியமற்றது எனக் கூறினார்கள். *(புகாரி) புகாரி, முஸ்லிம் போன்ற ஹதீஸ் கிரந்தங்களில் இந்தச் செய்தி பல இடங்களில் பதிவு செய்யப்பட்-டிருக்கின்றது.*

நபி ﷺ அவர்கள் எழுதாமல்விட்ட அம்சம் என்ன என்பதுபற்றி பலர் பலவிதாமாக விளக்கம் தருகின்றனர். அதில் அலி رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களை தலைவராக்கும்படிச் சொல்ல இருந்தார்கள். இந்த நபித்தோழர்கள் அதனை

கூச்சலிட்டு தடுத்துள்ளார்கள், மறைத்துள்ளார்கள் போன்ற உண்மைக்குப் புறம்பான அபத்தங்கள் நிறைந்த பல கட்டுக்கதைகளையும் விளக்கங்களையும் ஷீஆக்கள் நம்பினாலும் உண்மையில் அது வல்ல விஷயம் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

இரண்டாவது அம்சம்: மார்க்கத்திற்கு தேவையான ஒன்றாக இருந்து அதைச் சொல்லாமல் விட்டார்களா? என்றால் அதுவும் இல்லை.

அப்படியானால் அது என்னவாகத்தான் இருக்க முடியும் என்பது பற்றி இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி رَحِمَهُ ٱللَّٰهُ அவர்கள் பின்வருமாறு விளக்கம் தருகின்றார்கள்.

قال ابن حجر العسقلاني: وهذا يدل على أن الذي أراد أن يكتبه لم يكن أمرا متحتما لأنه لو كان مما أمر بتبليغه لم يكن يتركه لوقوع اختلافهم

فتح الباري - ابن حجر - (٨ / ١٣٤ )

நபி صَلَّىٱللَّٰهُعَلَيْهِوَسَلَّمَ அவர்கள் எழுதித் தருவதாக சொன்ன விஷயம் அவசியமான ஒன்றாக இல்லை என்பதை இந்நிகழ்வின் மூலம் அறியலாம். ஏனெனில் அதனை எத்தி வைப்பது கட்டாயக் கடமை என்றிருப்பின் அவர்கள் மத்தியில் கருத்து முரண்பாடுகள் எழுந்தாலும் அதனை எத்திவைக்காது விட்டிருக்க-மாட்டார்கள். *(இமாம் இப்னு ஹஜர். ஃபத்ஹுல் பாரி)*

பித்அத்தை எச்சரிக்கும் மற்றொரு ஹதீஸ்

عن العرباض بن سارية قال : وعظنا رسول الله صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ موعظة ذرفت منها العيون ووجلت منها القلوب قلنا يا رسول الله ان هذه لموعظة مودع فماذا تعهد إلينا قال قد تركتكم على البيضاء ليلها كنهارها لا يزيغ عنها بعدي الا هالك ومن يعش منكم فسيرى اختلافا كثيرا فعليكم بما عرفتم من سنتي وسنة الخلفاء الراشدين المهديين

(سنن ابن ماجه ٤٣ ، مسند أحمد بن حنبل ١٧١٨٢)

அல்லாஹ்வின் தூதர் صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் எங்களுக்கு உருக்கமான உபதேசம் செய்தார்கள். அதனால் கண்கள் கண்ணீர் மல்கின. இதயங்கள் நடு நடுங்கின. நாங்கள் அல்லாஹ்வின் தூதரே! இது இறுதியான உரை போன்றிருக்கின்றதே எனக் கூறி, எங்களோடு என்ன உறுதி மொழி எடுத்துக் கொள்ளப்போகின்றீர்கள் எனக் கேட்டோம். அப்போது அவர்கள் வெள்ளை வெளேர் என்ற ஒரு பால்வெளியில் உங்களை நான் விட்டுச் செல்கின்றேன். அதன் இரவும் பகல் போன்றது. எனக்குப் பின்னால் அழிவைத் தழுபவனைத் தவிர வேறு யாரும் வழி கெட்டுச் செல்லமாட்டார் எனக் கூறி விட்டு, உங்களில் வாழ்கின்ற மக்கள் பல கருத்து முரண்பாடுகளை காண்பீர்கள். அப்போது நீங்கள் எனது வழிமுறையில் இருந்து அறிந்து வைத்துள்ளதையும் நேர்வழியில் நடத்தப்பட்ட எனது கலீ∴.பாக்களின் வழிமுறையையும் பற்றிக் கொள்ளுங்கள் எனக் கூறினார்கள்.

(இப்னுமாஜா, அஹ்மத்)

இமாம் முஸ்லிமின் கிரந்தத்தில் நபித்தோழர்களின் சிறப்புக்கள் பற்றிய செய்தி ஒன்றின் தொடரில்,

وَأَصْحَابِي أَمَنَةٌ لأُمَّتِي فَإِذَا ذَهَبَ أَصْحَابِي أَتَى أُمَّتِي مَا يُوعَدُونَ

(صحيح مسلم ٦٦٢٩)

எனது தோழர்கள் எனது உம்மத்தின் பாதுவகா-வலர்கள், எனது தோழர்கள் மரணித்தால் எனது சமுதயாத்தினர் தமக்கென வாக்களிக்கப்பட்டதைக் கொண்டு வந்து விடுவார்கள் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள் என இடம் பெற்றுள்ள ஹதீஸை விளக்கும் இமாம் கலாபாதி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள்:

وكانت الأمة على ذلك في حياة أصحاب رسول الله ﷺ ، فلما ذهب أصحابه ظهرت الأهواء والبدع ، واختلفوا في الدين ، وتفرقوا في الآراء والديانات ، فكفر بعضهم بعضا ، وتبرأ بعضهم من بعض ، فصاروا فرقا شتى ، وهو الذي وعدوا ... (بحر الفوائد المسمى بمعاني الأخيار للكلاباذي- (١ : ١٩١) المؤلف : محمد بن إبراهيم الكلاباذي)

நபித்தோழர்கள் உயிர் வாழும் போது இந்த சமுதாய மக்கள் வாழ்வில் கொள்கைப் பிரிவினை இன்றி அதில் ஐக்கியமான நிலையில் இருந்து வந்தார்கள். அவர்களின் தோழர்களின் மறைவோடு மனோ இச்சைகள், புதிய புதிய பித்அத் அநாச்சாரங்கள் என்பன வெளிவந்தன. அதனால் அவர்கள் மார்க்கத்தில் தமக்குள் கருத்து முரண்பட்டுக் கொண்டனர்.

கருத்துக்களிலும் கோட்பாடுகளிலும் பல பிரிவுகளாகப் போனார்கள்.

அத்தோடு, அவர்கள் ஒருவரை ஒருவர் காபிராகப் பார்த்தார்கள். ஒருவரில் இருந்து மற்றவர் விலகியும் ஒதுங்கியும் நீங்கியும் பல பிரிவுகளாகவும் மாறினார்கள். இதுதான் இவர்கள் வாக்களிக்கப்பட்டது என்பதன் பொருளாகும் எனக் குறிப்பிடுகின்றார்கள்.

*(இமாம் அல்கலாபாதி – பஹ்ருல் ∴பாவாயித்)*

இதன் மூலம் இஸ்லாமிய மார்க்கத்தின் அனைத்து விவகாரங்களும் அல்லாஹ்வின் தூதர் மூலம் அல்லாஹ் முழுமைப்படுத்தி இருப்பதோடு முஸ்லிம்கள் மத்தியில் மார்க்கப் பிரச்சினைகள் ஏற்பட்டால் அவர்கள் தெளிவான வழி என்று போதிக்கப்பட்ட நபியின் வழிமுறைகளையும், கலீ∴பாக்கள் என்ன வழிமுறைகளில் பிரச்சினைகளை அணுகினார்களோ அவ்வாறு அணுகுவதன் மூலமும் தீர்வைக் காண வேண்டும் என உபதேசிக்கப்பட்டுள்ளனர். இது எந்த ஒரு சமூகத்திற்கும் கொடுக்கப்படாத மிகப் பெரும் பாக்கியமாகும்.

அப்படியானால் ஒருவரின் பிறந்த, இறந்த தினங்களை முன்னிட்டு விஷேடமான நிகழ்வுகள், விழாக்கள், கொண்டாட்டம் நடத்துவது, அன்னதானம் வழங்குவது போன்ற பண்பாடுகள் நபித்துவக் காலத்தில் இல்லாத பழக்கமாக இருந்து, பிற்பட்டகாலங்களில் தோன்றி இருப்பின் அதன் முடிவு என்னவாக இருக்க முடியும்?

மௌலித், மீலாத், கந்தூரி வைபவங்கள் தொடர்பான மார்க்கப் பிரச்சினைகள் எழுகின்ற போது அதனை நீங்கள் மேற்படி அடிப்படையில் அணுகியவேளை அற்கான ஆதாரம் இல்லை எனக் காண்கின்றீர்கள். அப்படியானால் நீங்கள் என்ன முடிவுக்கு வரவேண்டும் என்பதை நீங்களே தீர்மானிக்கலாம்.

அது ஒரு புதிய வழிமுறைதான் என்றிருப்பின் அதனை எப்படி நீங்கள் மார்க்கமாக அங்கீகரிக்க முடியும்? என சிந்திக்க வேண்டும்.

மேற்படி வழிமுறை யூத, கிரிஸ்தவர்கள் போன்ற பிறமத மக்களின் நடைமுறையுடன் தொடர்புடைய பழக்கமாக இருந்தாலும் நமது மார்க்கத்தில் அதனை நடைமுறைப்படுத்தினால் என்ன என்ற கேள்வி எழுக் கூடாது. ஏனெனில்,

عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا قَالَتْ قَالَ رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ مَنْ أَحْدَثَ فِي أَمْرِنَا هَذَا مَا لَيْسَ فِيهِ فَهُوَ رَدٌّ. (أخرجه البخاري: ٢٦٩٧)

*"எவர் ஒருவர் நமது மார்க்கத்தில் இல்லாத ஒன்றை தோற்றுவிக்கின்றாரோ அது நிராகரிக்கப்படும்"* என நபிகள் நாயகம் صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் கூறியுள்ளார்கள். அறிவிப்பவர் அன்னை ஆயிஷா رَضِيَ اللهُ عَنْهَا அவர்கள்.

*(புகாரி: 2697)*

நபி ﷺ அவர்களின் காலத்தில் இல்லாத ஒன்றை வணக்கமாகவோ, வணக்கத்தின் நிலையிலோ உருவாக்கி, அதனை மிதித்து நடக்காமல், மதித்து நடப்பதற்குப் பெயர்தான் பித்அத் என்ற புதுமை. அதற்கு மேற்படி ஹதீஸில் தெளிவான தீர்வு சொல்லப்பட்டுவிட்டது.

عَنْ أَبِي هُرَيْرَةَ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ دَعُونِي مَا تَرَكْتُكُمْ إِنَّمَا هَلَكَ مَنْ كَانَ قَبْلَكُمْ بِسُؤَالِهِمْ وَاخْتِلَافِهِمْ عَلَى أَنْبِيَائِهِمْ فَإِذَا نَهَيْتُكُمْ عَنْ شَيْءٍ فَاجْتَنِبُوهُ وَإِذَا أَمَرْتُكُمْ بِأَمْرٍ فَأْتُوا مِنْهُ مَا اسْتَطَعْتُمْ .

(أخرجه البخاري برقم : ٧٢٨٨)

“நான் உங்களை விட்டுச் செல்லும் வழியைப் பற்றிக் கொள்ளுங்கள் உங்களுக்கு முன்வாழ்ந்தோர் (பயனற்ற) கேள்விகளாலும் தமது நபிமார்கள் மீது முரண்பட்டுக் கொண்டதாலுமே அழிந்தனர். நான் ஏதாவது ஒரு விடயத்தை தடுத்தால் அதனை முழுமையாக தடுத்துக் கொள்ளுங்கள் ஏதாவது ஒரு கட்டளை பிறப்பித்தால் அதிலிருந்து முடியுமான அளவு எடுத்து நடவுங்கள்” என நபி ﷺ அவர்கள் கூறினார்கள். *(புகாரி 7288)*

நபிகள் நாயகம் ﷺ அவர்கள் தனது இருபத்தி மூன்று வருட நபித்துவ காலத்தில் கழிவறை ஒழுக்கங்கள், துப்புதல், உறங்குதல், உண்ணுதல் போன்ற சாதாரண நடைமுறைகள் முதல் ஆட்சி அதிகார முகாமைத்துவ முறைகள் வரை தமது தோழர்களுக்கு

தெளிவாக கற்றுக்கொடுக்காது இந்த உலகைப் பிரியவில்லை என்பதை முன்னர் நாம் எடுத்துக்காட்டிய நபி மொழி ஒன்று உறுதி செய்கின்றது.

எனவே அப்படியான சிறப்புக்களைத் தாங்கிய இந்த மார்க்கத்தில் புதிது புதிதாக யாரும் எதையும் இணைத்து வழிபட வேண்டிய அவசியம் இல்லை.

நபித்தோழர்களில் சிறந்த அறிவாளிகளில் ஒருவர் எனப் போற்றப்படும் (துர்ஜீமானுல் குர்ஆன்) குர்ஆனின் விரிவுரை என்ற சிறப்புப் பெயருக்குச் சொந்தக்காரரான அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் رَضِيَ اللَّهُ عَنْهُمَا அவர்களின் பின்வரும் அறிவுரை பற்றி கொஞ்சம் சிந்தத்துப் பாருங்கள்.

عَنِ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا ، قَالَ : يَا مَعْشَرَ الْمُسْلِمِينَ كَيْفَ تَسْأَلُونَ أَهْلَ الْكِتَابِ وَكِتَابُكُمُ الَّذِي أُنْزِلَ عَلَى نَبِيِّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَحْدَثُ الأَخْبَارِ بِاللَّهِ تَقْرَؤُونَهُ لَمْ يُشَبْ وَقَدْ حَدَّثَكُمُ اللَّهُ أَنَّ أَهْلَ الْكِتَابِ بَدَّلُوا مَا كَتَبَ اللَّهُ وَغَيَّرُوا بِأَيْدِيهِمُ الْكِتَابَ فَقَالُوا هُوَ مِنْ عِنْدِ اللَّهِ لِيَشْتَرُوا بِهِ ثَمَنًا قَلِيلاً أَفَلاَ يَنْهَاكُمْ مَا جَاءَكُمْ مِنَ الْعِلْمِ عَنْ مُسَاءَلَتِهِمْ ، وَلاَ وَاللَّهِ مَا رَأَيْنَا مِنْهُمْ رَجُلاً قَطُّ يَسْأَلُكُمْ ، عَنِ الَّذِي أُنْزِلَ عَلَيْكُمْ. (صحيح البخاري ٢٦٨٥)

முஸ்லிம் மக்களே! வேதக்காரர்களிடம் நீங்கள் எப்படி மார்க்க விளக்கம் கோர முடியும்? உங்கள் நபி صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களுக்கு இறக்கியருளப்பட்ட

*வேதம் இருக்கின்றதே அதுதான் அல்லாஹ் தொடர்பான அதி நவீன செய்திகளைக் கொண்ட-தாகும். அதனை நீங்கள் (சமகாலத்தில்) ஓதிக்-கொண்டிருக்கின்றீர்கள். அது அதன் பொலிவை இழப்பதே இல்லை. வேதக்காரர்கள் அல்லாஹ்வின் வேதத்தை திரித்து, தமது கரங்களால் அந்த வேதத்தை மாற்றி, அதைக் கொண்டு சில கிரயங்களைப் பெற்றுக் கொள்வதற்காக நிச்சயமாக அது அல்லாஹ்விடம் இருந்து வந்ததுதான் என்று கூறியது பற்றி அல்லாஹ் உங்களுக்கு அறிவித்துத் தந்துள்ளான். அதனால் தெளிவான குர்ஆனிய அறிவு உங்களுக்கு வந்த பின்னரும் அவர்களிடம் விளக்கம் கேட்பது பற்றி அல்லாஹ் உங்களைத் தடுக்கவில்லையா? அல்லாஹ்வின் மீது சத்தியமாக அவர்களில் யாராவது ஒரு மனிதனாவது உங்கள் வேதத்தில் இறக்கப்பட்டது பற்றி விளக்கம் கேட்பதை நாம் கண்டதில்லையே எனக் கூறினார்கள்.* (புகாரி)

இஸ்லாமிய மார்க்கத்தில் காட்டித்தரப்படாத மவ்லித், மீலாதுகள், கப்று வணக்கம், ஸலாதுன் நாரிய்யா, புர்தா போன்ற பித்அத்தான, ஷிர்க்கான காரியங்கள் மார்க்கத்தில் தடை செய்யப்பட்டிருப்பதோடு அவை பிற மதக் கலாசாரத்தில் இருந்து கொப்பி செய்யப்-பட்டதாகும்.

எனவே இவ்வாறான நடைமுறைகள் நமக்குத் தேவைதானா? என ஒரு முஸ்லிம் தன்னிடம் கேட்டுக் கொள்ள வேண்டும்.

## இமாம்களின் கூற்றுக்கள்

மௌலித் என்பது நபி புகழ்மாலை தானே! அது ஒரு நல்லமல்தானே! அதில் என்ன பிரச்சினை? நன்மையான ஒரு காரியத்தைச் செய்வது என்ன பாவமா? எனக் கேள்வி கேட்டு, அது நல்லதுதான் என நாமாக முடிவு செய்யும் அதிகாரம் நமக்கில்லை.

தாபியீன்களில் மிகச் சிறந்தவர்களில் ஒருவர்தான் ஸயீத் பின் முஸய்யிப் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள். மதீனா தாபியீன்களில் மிகச் சிறந்த அறிஞர்களில் ஒருவரும் கூட. அவர்களிடம் ஒரு மனிதர் கேட்ட கேள்விக்கு அவர் அளித்த பதிலைக் கவனியுங்கள்.

حَدَّثَنَا قَبِيصَةُ أَخْبَرَنَا سُفْيَانُ عَنْ أَبِي رَبَاحٍ - شَيْخٌ مِنْ آلِ عُمَرَ - قَالَ : رَأَى سَعِيدُ بْنُ الْمُسَيَّبِ رَجُلاً يُصَلِّي بَعْدَ الْعَصْرِ الرَّكْعَتَيْنِ يُكْثِرُ فَقَالَ لَهُ. فَقَالَ : يَا أَبَا مُحَمَّدٍ أَيُعَذِّبُنِي اللهُ عَلَى الصَّلاَةِ؟ قَالَ : لاَ وَلَكِنْ يُعَذِّبُكَ اللهُ بِخِلاَفِ السُّنَّةِ. (سنن الدارمي - المكتبة الشاملة)

ஸயீத் பின் முஸய்யிப் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் மஸ்ஜித் நபவியில் அஸருக்குப் பின்னால் அதிகமதிகம் தொழும் ஒரு மனிதரை அவதானித்து, அவரிடம் (கூற வேண்டியதைக்) கூறினார்கள். அம்மனிதர்: அபூ முஹம்மத் அவர்களே! தொழுவதற்காக அல்லாஹ் என்னை தண்டிப்பானா? எனக் கேட்டார். அதற்கு அவர்கள், இல்லை. “*எனினும் நீ சுன்னா (நபிவழிக்கு)*

முரணாக செய்வதற்காக அல்லாஹ் உன்னை தண்டிப்பான்" எனக் கூறினார்கள். (தாரமி 444)

நபி ﷺ அவர்களின் காலத்தில் இல்லாத புதிய விடயங்கள் தொடர்பாக இமாம்கள் கடும் போக்கைக் கடைப்பிடிப்போராக இருந்தனர்.

மதீனா நகரின் இமாம் என்ற சிறப்புப் பெயருக்கு சொந்தக்காரரான இமாம் மாலிக் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் சுன்னா விஷயத்தில் கண்டிப்பானவர்களாகவும், பித்அத் பற்றிய போக்கில் கடும் போக்காளராகவும் இருந்தார்கள். அவர்களின் பின்வரும் கூற்றை அவர்களின் சிரேஷ்ட மாணவர்களில் ஒருவர் தருகின்றார்.

قال ابن الماجشون سمعت مالكا يقول من ابتدع في الاسلام بدعه يراها حسنه فقد زعم ان محمدا ﷺ خان الرسالة لان الله يقول ) ...ٱلْيَوْمَ أَكْمَلْتُ لَكُمْ دِينَكُمْ وَأَتْمَمْتُ عَلَيْكُمْ نِعْمَتِي وَرَضِيتُ لَكُمُ ٱلْإِسْلَٰمَ دِينًا ... ﴿٣﴾ ﴿المائدة: ٣﴾ فما لم يكن يومئذ دينا فلا يكون اليوم دينا

(الاعتصام ـ للشاطبى (١ : ٤٩)

"எவன் ஒருவன் மார்க்கத்தில் (பித்ஆவை) புதிய வழிமுறையை உருவாக்கி, அதனை அழகியதாகவும் காணுகின்றானோ, நிச்சயமாக அவன் முஹம்மத் ﷺ அவர்கள் தனது தூதுத்துவப் பணியில் மோசடி செய்துவிட்டதாகவே நம்புகின்றான்" என பித்அத்தைக் சாடிய இமாம் மாலிக் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள்

...ٱلۡيَوۡمَ أَكۡمَلۡتُ لَكُمۡ دِينَكُمۡ وَأَتۡمَمۡتُ عَلَيۡكُمۡ نِعۡمَتِي وَرَضِيتُ لَكُمُ ٱلۡإِسۡلَٰمَ دِينٗاۚ ....﴿٣﴾ ﴿المائدة: ٣﴾

இன்றைய தினம் உங்கள் மார்க்கத்தைப் பூரணப்படுத்தி விட்டேன். உங்கள் மீதுள்ள எனது அருட்கொடையை சம்பூரணப்படுத்தி விட்டேன். இஸ்லாத்தை உங்களுக்கு மார்க்கமாகப் பொருந்திக் கொண்டேன் என்ற அல்மாயிதா மூன்றாவது வசனத்தை மேற்கோள்காட்டி ஓதிக் காண்பித்து, *"அல்லாஹ் மார்க்கத்தைப் பூர்த்தி செய்தேன் எனக் கூறிவிட்டான் என விளக்கிய பின்னர், அந்தக் காலத்தில் மார்க்கமாக இல்லாமல் இருந்த ஒன்று இன்றைய காலத்தில் எப்படியும் மார்க்கமாக இருக்கவே முடியாது"* எனக் கூறியதாக அவர்களின் மாணவரான இப்னுல் மாஜிஷூன் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் கூறினார்கள். *(அஷ்ஷாதிபி: அல்இ:.திஸாம்)*

## இமாம் மாலிக் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் தொடர்பான மற்றொரு நிகழ்வு

عن سفيان بن عيينة قال قال رجل لمالك : يا أبا عبدالله من أين أحرم قال: من ذي الحليفة من حيث أحرم رسول الله صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فأعاد عليه مرارا فقال: إني أريد أن أحرم من المسجد فقال :لا تفعل قال إني أريد أن أحرم من المسجد من عند القبر قال : لا تفعل فإني أخشى عليك الفتنة قال : وأي فتنة في هذا إنما هي أميال أزيدها قال وأي فتنة أعظم من أن ترى أنك

سبقت إلى فضيلة قصر عنها رسول الله صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ ترى أن اختيارك لنفسك خير من اختيار الله واختيار رسول الله إني سمعت الله تعالى يقول :

... فَلْيَحْذَرِ ٱلَّذِينَ يُخَالِفُونَ عَنْ أَمْرِهِۦٓ أَن تُصِيبَهُمْ فِتْنَةٌ أَوْ يُصِيبَهُمْ عَذَابٌ أَلِيمٌ ﴿٦٣﴾ ﴿ النور: ٦٣ ﴾ (أحاديث في ذم الكلام وأهله – (أحاديث في ذم الكلام وأهله – أبو الفضل المقرىء) ، ((الاعتصام ـ للشاطبى)

இமாம் மாலிக் رَحِمَهُ ٱللَّهُ அவர்களிடம் ஒரு மனிதர் வந்து அபூ அப்தில்லாஹ் அவர்களே! நான் எங்கிருந்து இஹ்ராம் அணிய வேண்டும் எனக் கேட்டார். முஹம்மத் நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் இஹ்ராம் அணிந்த துல் ஹுலைபாவில் (மதீனாவின் ஹஜ், உம்ரா எல்லையில்) இருந்து என இமாம் அவர்கள் பதில் கூற, அவர் மீண்டும், மீண்டும் கெள்வி கேட்ட பின், நான் மஸ்ஜிதுன் நபவியில் இருந்து இஹ்ராம் அணியப் போகின்றேன் என்றார். இமாம் அவர்கள் அவ்வாறு செய்யாதே என்றார்கள். மீண்டும் அவர், நான் நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களின் கப்றுக்கு அருகாமையாக நின்று இஹ்ராம் அணியப் போகின்றேன். சில மைல்கள் தொலை தூரங்கள்தானே அதிகரிக்கின்றேன்? அது என்ன பிரச்சினையா? எனக் கேட்டார். அதற்கு இமாம் அவர்கள் *“நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களுக்கு வழங்கப்படாத, அவர்களோடு சுருங்கிவிட்ட விளக்கத்தைவிட (புதுமையான) ஒன்று மேலதிகமாக உனக்கு தரப்பட்டுள்ள, இந்த குழப்பமான விளக்கத்தை விடவுமா! மார்க்கத்தில் குழப்பம்*

இருக்கப் போகின்றது?" எனக் கேட்டுவிட்டு அல்லாஹ் கூறி உள்ளதை நான் பார்த்துள்ளேன் எனக் கூறிய பின்னர்,

... فَلْيَحْذَرِ ٱلَّذِينَ يُخَالِفُونَ عَنْ أَمْرِهِۦٓ أَن تُصِيبَهُمْ فِتْنَةٌ أَوْ يُصِيبَهُمْ عَذَابٌ أَلِيمٌ ﴿٦٣﴾ ﴿النور: ٦٣﴾

"அவனது கட்டளைக்கு மாற்றம் செய்வோர் (இணைவைப்பு - புதுமை போன்ற) குழப்பம் அவர்களுக்கு ஏற்படுவதில் இருந்தும், அல்லது நோவினை தரும் வேதனை அவர்களை பீடிப்பதில் இருந்தும் எச்சரிக்கையாக இருந்து கொள்ளட்டும்" என்ற அல்லாஹ்வின் வசனத்தை ஓதிக்காணப்பித்ததாக இமாம் அபுல் ஃபள் அல் முக்ரி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் குறிப்பிடுகின்றார்கள். *(அஹாதீஸ் ஃபீ தம்மில் கலாம், அல் இஃதிஸாம் போன்ற நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.)*

நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் மார்க்கமாக்காத ஒன்றை மார்க்கமாக்கிச் செய்வோரைக் கண்டிக்கின்ற அறிஞர் இமாம் சுயூதி அவர்கள்

لا تجد مبتدعا إلا وهو منتقص للرسول، وإن زعم أنه يعظمه بتلك البدعة، فإنه يزعم أنها هي السنة إن كان جاهلا مقلدا، وإن كان مستبصرا فيها فهو مشاق لله ولرسوله. شرح الجامع الصغير. (٤٠/١) (نقلا من كتاب موازين الصوفية في ضوء الكتاب والسنة . ص٢٨٠)

பித்அத்வாதியாக இருக்கும் எவனும் நபிகள் நாயகம் صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களைக் குறைகண்டவனே. அவன் அந்த பித்அத் (புதிய வழிமுறை) மூலம் அவர்களை கௌரவிப்பதாக மனப்பால் குடித்தாலும் சரியே! அந்த வழிமுறையை அவன் கண்மூடித்தனமாக, விபரமின்றிப் பின்பற்றும் ஒருவனாக இருந்தால் அதனை சுன்னத்தாக (நபிவழியாக) எண்ணிக் கொள்கின்றான். அதில் தெளிவுள்ளவனாக இருந்து கொண்டு (அந்தப் புதுமையைச் செய்தால்) அவன் அல்லாஹ்வையும், அவனது தூதரையும் நோவிக்கின்றான் எனக் கூறினார்கள்.

*(ஷரஹுல் ஜாமியிஸ் ஸகீர். பாகம்: 1. பக்: 40)*

## மறுமையில் கைசேதம்

மார்க்கத்தின் பெயரால் புதிய வழிமுறைகளை தோற்றுவிப்போரின் நிலை மறுமையில் கைசேதத்தை உண்டுபண்ணும் என்பதில் சந்தேகமில்லை. பின்வரும் நிகழ்வுகளை நன்றாக சிந்தியுங்கள்

وَيَوْمَ يَعَضُّ ٱلظَّالِمُ عَلَىٰ يَدَيْهِ يَقُولُ يَٰلَيْتَنِى ٱتَّخَذْتُ مَعَ ٱلرَّسُولِ سَبِيلًا ﴿٢٧﴾ ﴿الفرقان: ٢٧﴾

தனக்கு அநீதி இழைத்துக் கொண்டவன் மறுமை நாளில் தனது இரு கரங்களையும் கடித்துக் கொண்டு, எனக்கேற்பட்ட கேடே! நான் எனது தூதரோடு நின்று, அவர் வழியைப் பின்பற்றி இருக்க வேண்டாமா? என்று (கைசேதப்பட்டுக்) கூறுவான். (அல்புர்கான்: 27)

يَوْمَ تُقَلَّبُ وُجُوهُهُمْ فِي ٱلنَّارِ يَقُولُونَ يَٰلَيْتَنَآ أَطَعْنَا ٱللَّهَ وَأَطَعْنَا ٱلرَّسُولَا۠ ﴿٦٦﴾ وَقَالُوا۟ رَبَّنَآ إِنَّآ أَطَعْنَا سَادَتَنَا وَكُبَرَآءَنَا فَأَضَلُّونَا ٱلسَّبِيلَا۠ ﴿٦٧﴾ رَبَّنَآ ءَاتِهِمْ ضِعْفَيْنِ مِنَ ٱلْعَذَابِ وَٱلْعَنْهُمْ لَعْنًا كَبِيرًا ﴿٦٨﴾ ﴿الأحزاب: ٦٦ - ٦٨﴾

(நரகவாதிகளான) அவர்களின் முகங்கள் நரகில் போட்டு புரட்டப்படும் நாளில் அவர்கள் எங்கள் கைசேதமே! அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் நாம் (முழுமையாக) கட்டுப்பட்டிருக்க வேண்டுமே! எனக் கூறுவார்கள். எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நாம் எமது பெரியார்களுக்கும், தலைவர்களுக்கும் கட்டுப்பட்டோம். அதனால் எம்மை அவர்கள் வழிகேட்டில் கொண்டு சென்றுவிட்டனர். எங்கள் இரட்சகனே! நீ இவர்களுக்கு இருமடங்கு வேதனையை வழங்குவாயாக! அவர்களை நீ பெரிய அளவில் சபிப்பாயாக எனக் கூறுவார்கள்.

*(அல்அஹ்ஸாப்: 66-68)*

இமாம் மாலிக் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் குறிப்பிடுவது போன்று புதிய வழிமுறைகள் என்பது நபிகள் நாயகம் صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களை அவர்களின் இருபத்தி மூன்று ஆண்டு தூதுத்துவப் பணியில் குறைகாணுவதாகவே அமையும்.

ஏனெனில் புர்தா, மவ்லித், மீலாத், கந்தூரி, கப்று வணக்கம். மண்ணறைகளில் விழா எடுத்தல், மரணித்த அவ்லியாக்களுக்காக கால்நடைகளை அறுத்துப் பலியிடுதல் போன்ற இன்னோரென்ன புதிய, புதிய வழி முறைகளை மார்க்கத்தில் தோற்றுவிப்போர் மறுமையில் “ஹவ்ழுல் கவ்ஸர்” நீர்த்தடாகத்தை நோக்கி நீரருந்த

வருகின்ற போது "வானவர்கள்" அவர்களை தடுத்து நிறுத்துவார்கள்.

அங்கு நின்று கொண்டிருக்கும் நபி ﷺ அவர்கள் *"இவர்கள் எனது சமுதாயத்தவர்!! "எனது சமுதாயத்தவர்" (அவர்களை விட்டு விடுங்கள்) எனக் குரல் கொடுப்பார்கள். அப்போது வானவர்கள்,*

إنك لا تدري ما أحدثوا بعدك. "(முஹம்மதே!) உமது மரணத்திற்குப் பின் அவர்கள் என்னென்ன புதுப் புதுக் கொள்கைகள், வழிமுறைகளை உருவாக்கினார்கள்"! என்பது பற்றி நீர் அறியமாட்டீர் எனக் கூறுவார்கள்.

அதற்கு நானும் சீற்றம் அடைந்து, سحقا ، سحقا لمن بدل بعدي *"எனக்குப் பின்னால் (மார்க்கத்தில்) மாற்றம் செய்தோர் இறையருளிலிருந்து தூரமாகட்டும்! தூரமாகட்டும்!"* எனக் கூறுவேன் என நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறியதாக இப்னு உமர் رَضِيَ ٱللَّٰهُ عَنْهُمَا அவர்கள் அறிவிக்கின்றார்கள். *(முஸ்லிம்)*

## இஸ்லாத்தில் அங்கீகரிக்கப்பட்ட இரு பெருநாட்கள்

வருடத்தில் இரு பெருநாட்களையே இஸ்லாம் மார்க்கமாக்கியுள்ளது. எனவே அதில் அனுமதிக்கப்படாத வேறு ஒருநாளை விஷேட தினமாக்குவதை நபிகள் நாயகம் رَضِيَ ٱللَّٰهُ عَنْهُ அவர்கள் உயிருடன் இருந்த போதும் கூட விரும்பவில்லை என்பதை பின்வரும் நபிமொழி உறுதி செய்கின்றது.

عَنْ أَنَسٍ قَالَ قَدِمَ رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ الْمَدِينَةَ وَلَهُمْ يَوْمَانِ يَلْعَبُونَ فِيهِمَا فَقَالَ مَا هَذَانِ الْيَوْمَانِ قَالُوا كُنَّا نَلْعَبُ فِيهِمَا فِي الْجَاهِلِيَّةِ فَقَالَ رَسُولُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنَّ اللهَ قَدْ أَبْدَلَكُمْ بِهِمَا خَيْرًا مِنْهُمَا يَوْمَ الْأَضْحَى وَيَوْمَ الْفِطْرِ

(أبو داود /١١٣٤)

நபிகள் நாயகம் ﷺ அவர்கள் மதீனாவிற்கு (ஹிஜ்ரத்) வந்த போது அங்குள்ள மக்கள் இரு நாட்களை பிரத்தியேகமாக ஒதுக்கி விளையாடுவதைக் கண்டார்கள். இந்த இரு நாட்களும் என்ன (எதற்காக விளையாடுகின்றீர்கள்) என கேட்ட போது. அவ்விரண்டு நாட்களிலும் “ஜாஹிலிய்யா” அறியாமைக்காலத்தில் விளையாடும் வழக்கமுடையோராக இருந்தோம் எனக் கூறினர்.

இவ்விரு தினங்களையும்விட சிறந்த இரு தினங்களை அல்லாஹ் உங்களுக்கு பகரமாக தந்துள்ளான். (அவைதாம்) ஹஜ்ஜுப் பெருநாளும், நோன்பு பெருநாளும் எனக் கூறினார்கள். *(அபூதாவூத் 1134)*

வருடத்தில் இரண்டு நாட்களை தேர்வு செய்து அறியாமைக் காலத்தில் விளையாடி வந்த ஒரு பழக்கத்தின் அடிப்படையிலேயே நபித்தோழர்கள் விளையாடி வந்திருக்கின்றனர்.

அது மாற்று மதத்தவரின் செயலுக்கு ஒப்பாக இருந்ததால் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் அதனை அங்கீகரிக்கவில்லை. எனவே யூத, மற்றும் கிரிஸ்தவர்கள் தமது நபிமார்களின் பிறந்தநாளைக்

கொண்டாடுவது போன்று தனது (மீலாத்) பிறந்தநாள் கொண்டாடப்படுவதை அங்கீகரிப்பார்களா? என சிந்திக்க வேண்டும்.

பித்அத்தை, ஷிர்க்கை தோற்றுவிக்கும் பழக்க வழக்கங்கள், பண்பாடுகள் இஸ்லாமிய சமுதாயத்தில் புகுந்து விடக்கூடாது என்பதில் நபி ﷺ அவர்கள் மிகவும் அவதனாமாக இருந்துள்ளார்கள்.

ஜாஹிலிய்யாக் கால பண்பாடுகளில் ஒன்றாக விளங்கிய அல்லாஹ்வுக்கு இணைவைத்து பலி கொடுக்கும் இடங்களில் கூட முஸ்லிம்கள் தமது அறுப்பு முறைகளை வைத்துக் கொள்வதை அல்லாஹ்வின் தூதர் அவர்கள் தடை செய்திருப்பதைப் பார்க்கின்ற போது அவர்களின் அவதானிப்பின் நுணுக்கத்தைப் புரிந்து கொள்ளலாம்.

நபி ﷺ அவர்களின் காலத்தில் ஒரு மனிதர் **'புவானா'** என்ற இடத்தில் சில பிராணிகளை அறுத்து அக்கம் பக்க ஏழைகளுக்கு விநியோகிகும் நோக்கில் நபி ﷺ அவர்களிடம் வந்து

عن ثَابِتُ بْنُ الضَّحَّاكِ قَالَ : نَذَرَ رَجُلٌ عَلَى عَهْدِ رَسُولِ اللهِ –ﷺ– أَنْ يَنْحَرَ إِبِلاً بِبُوَانَةَ فَأَتَى النَّبِىَّ – ﷺ– فَقَالَ : إِنِّى نَذَرْتُ أَنْ أَنْحَرَ إِبِلاً بِبُوَانَةَ. فَقَالَ النَّبِىُّ – ﷺ– : «هَلْ كَانَ فِيهَا وَثَنٌ مِنْ أَوْثَانِ الْجَاهِلِيَّةِ يُعْبَدُ ». قَالُوا : لاَ. قَالَ : « هَلْ كَانَ فِيهَا عِيدٌ مِنْ أَعْيَادِهِمْ ». قَالُوا : لاَ. قَالَ رَسُولُ اللهِ –ﷺ– : « أَوْفِ بِنَذْرِكَ فَإِنَّهُ لاَ وَفَاءَ لِنَذْرٍ فِى

مَعْصِيَةِ اللهِ وَلاَ فِيمَا لاَ يَمْلِكُ ابْنُ آدَمَ ». سنن أبي داود ـ محقق وبتعليق الألباني - (٣ / ٢٣٦)

அல்லாஹ்வின் தூதரே! நான் புவானாவில் அறுத்துப் பலியிட நேர்ச்சை செய்துள்ளேன் என்றார். உடனே நபி ﷺ அவர்கள் *“அங்கு ஜாஹிலிய்யாக் கால சிலைகள் ஏதும் வணங்கப்பட்டதா?”* எனக் கேட்டார்கள். அவர், இல்லை என்றார். மீண்டும் *“அவர்களின் திருவிழாக் கொண்டாட்டங்கள் ஏதாவது கொண்டாடப்பட்டதா?”* எனக் கேட்டார்கள். அவர் இல்லை என்றார். அப்படியானால் உனது நேர்ச்சையை நீ நிறைவேற்றலாம் எனக் கூறி, அனுமதித்தார்கள்

*(சுனன் அபூதாவூத்)*

***‘புவானா’*** என்பது, ஜாஹிலிய்யாக் கால மக்களின் திருவிழாக்கள், ஷிர்க்கான அறுப்புக்கள் நடைபெறும் இடங்களில் ஒன்றாக இருந்ததா? என்ற கேள்வி அவ்வாறான மாற்று மத கலாசாரத்தை ஒத்த செயல்களாக விளங்கும் அறுத்துப் பலியிடுதல், கொண்டாட்டங்கள் போன்ற நிகழ்வுகளுக்கு கூட அனுமதி வழங்குமுன் நபி ﷺ அவர்கள் இவ்வாறு வினவினார்கள் என்றால் ஷிர்க்கான வெறும் அரபுப்பாடல்கள் பாடி மீலாத் கொண்டாடி, கந்தூரி நடத்தும் நமது நிலை என்ன? என்று நாம் சிந்திக் வேண்டும்.!

இந்த ஹதீஸை விளக்கும் மதீனாப் பல்கழைக் கழக ஹதீஸ்துறை ஆய்வாளரும் மஸ்ஜித் நபவியின்

பேராசியர்களில் ஒருவருமான அஷ்ஷைக் அப்துல் முஹ்ஸின் அல்-அப்பாத் அவர்களின் பின்வரும் விளக்கம் சிந்திக்க வேண்டியதாகும்.

وهنا يرد سؤال: هل يجوز الذبح عند الأضرحة وإقامة الولائم عليها؟ علماً بأن الذين يذبحون ينوون أن الذبح لله خالصاً؟ والجواب: أنه لا يجوز؛ لأن هذا فيه تعظيم لأصحاب القبور، فحتى وإن لم يذبح للأضرحة وإنما ذبح لله فهو ليس شركاً، ولكنه من الأمور المبتدعة والمحرمة.

(شرح سنن أبي داود ـ عبد المحسن العباد – ١٧ : ٣٣١)

மண்ணறைகளில் பிராணிகளை அறுப்பவர்கள் அதனை அல்லாஹ்வுக்காக மட்டும் என்ற எண்ணத்தோடு மாத்திரம் அறுக்கின்றனர் என்று அறிந்தும் அங்கு விருந்துபசாரம் நடத்தலாமா? என்ற கேள்வி இங்கு எழுகின்றது.

***பதில்:*** மண்ணறை வாசிகள் என்போர் இங்கு மகத்துவப்படுத்தப்படுவதனால் அது கூடாத காரியமாகும். அறுப்பவர் தர்காக்களில் அடங்கப்பட்டோருக்காகத்தான் அதனை அறுத்துப் பலியிடவில்லை என்றாலும் அல்லாஹ்வுக்காக அறுத்தார். எனவே அது இணைவைத்தலாகாது என வைத்துக் கொண்டாலும் அது மார்க்கத்தில் ஹராமாக்கப்பட்ட, முற்றிலும் தடை செய்யப்பட்ட புதிதாக தோற்றுவிக்கப்பட்ட பித்துஅத்-துக்களில் ஒன்றாக அது உள்ளடங்கும். *(அஷ்ஷைக் அப்துல் முஹ்ஸின் அல்அப்பாத் - ஷரஹ் சுனன் அபீதாவூத்)*

மார்க்க அறிஞர்களின் இவ்வாறான ஆழமான விளக்கமின்மை மௌலவிகளிடம் இருப்பதால் அவர்கள் தமது வாழ்வில் பித்அத், ஷிர்க்கைச் செய்யத் தூண்டும் காரணிகளில் ஒன்றாக அது அமைந்து-விடுவதை அவதானிக்க முடிகின்றது.

## நபி ﷺ அவர்களின் அங்கீகாரமற்ற செயல்கள் மார்க்கத்தில் நிராகரிக்கப்படும்

நபிகள் நாயகம் ﷺ அவர்கள் காட்டித்தந்த வணக்கங்களை அதன் அமைப்பிற்கும், முறைக்கும் மாற்றமாகச் செய்வது மார்க்கம் அங்கீகரிக்காத செயலாகும். இதனை விளக்கும் பல நபி மொழிகள் ஹதீஸ் கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْهُ قَالَ سَمِعْتُ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ لَا يَصُومَنَّ أَحَدُكُمْ يَوْمَ الْجُمُعَةِ إِلَّا يَوْمًا قَبْلَهُ أَوْ بَعْدَهُ (أخرجه البخاري برقم : ١٩٨٥)

ஜும்ஆத்தினத்திற்கு முன்னுள்ள நாளில் அல்லது அதற்கு பின்னுள்ள நாளில் நோன்பு நோற்காது அத்தினத்தில் நோன்பு நோற்கவேண்டாம்; என நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறியதை தான் செவிமடுத்ததாக *அபூஹுரைரா* رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்கள் *அறிவிக்கின்றார்கள். புகாரி 1985).*

عَنْ جُوَيْرِيَةَ بِنْتِ الْحَارِثِ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ دَخَلَ عَلَيْهَا يَوْمَ الْجُمُعَةِ وَهِيَ صَائِمَةٌ فَقَالَ أَصُمْتِ أَمْسِ قَالَتْ لَا قَالَ تُرِيدِينَ أَنْ تَصُومِي غَدًا قَالَتْ لَا قَالَ فَأَفْطِرِي (أخرجه البخاري برقم :١٩٨٦)

இதற்கு மாற்றமாக நபியின் மனைவியரில் ஒருவரான அன்னை ஜுவைரியா رَضِيَ ٱللَّهُ عَنْهَا அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் அவர்களின் (வீட்டில்) நபிகள் நாயகம் صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் நுழைந்தார்கள். நீ நேற்றைய தினம் நோன்பு நோற்றிருந்தாயா? என்று கேட்க அவர்கள் இல்லை எனப் பதில் கூறினார்கள். நாளை நோன்பு நோற்பாயா? என்றதும் இல்லை; என்றார்கள். அப்படியானால் நோன்பை விட்டு விடு எனக் கூறினார்கள். *(புகாரி 1986).* மற்றொரு அறிவிப்பில் "நோன்பை விட்டுவிடும் படி கூறவே அவர்கள் அதனை விட்டுவிட்டார்கள் என இடம் பெற்றுள்ளது.

பொதுவான வணக்க வழிபாடுகள் போன்று நோன்பும் வணக்கங்களோடு தொடர்புடைய ஒரு கடமை என்பதை நாம் அறிவோம்.

வெள்ளிக்கிழமை தினத்தை விஷேட தினமாகக் கருதி நோற்கப்பட்ட காரணத்தால் நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் அதற்கு அங்கீகாரம் வழங்கவில்லை எனில், நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களின் காலத்தில் இல்லாத ஒரு புதிய கொண்டாட்டத்திற்கு அதுவும் மாற்று மதக்-கலாச்சாரத்திற்கு ஒப்பான இஸ்லாம் ஒழித்த இணைவைப்புக் கலாச்சாரத்திற்கு இஸ்லாத்தில் எந்த வகையில் அங்கீகாரம் கிடைக்கும்? என சிந்திக்க வேண்டும்.

## நபியை நேசிப்பதன் அளவுகோல்

அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களை நேசிப்பது என்பது அவர்களின் வழிமுறைகளைப் பின்பற்றுவதில் தங்கி இருக்கின்றது. நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களின் தோழர்கள் நபியின் மீது அளப்பெரிய அன்பும் பாசமும் வைத்தவர்கள்.

அவர்களின் மேனியில் முள்ளொன்று தைப்பதைக் கூட எள்முனையளவும் விரும்பாதவர்கள். அவர்களின் உயிருக்கு உத்தரவாதமாக தமது உயிர்களைத் துச்சமாக்கி, தம்மையே கேடயங்களாக மாற்றிக் கொண்டவர்கள்.

நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் உண்ட உணவின் மீதியை உண்ணுதல், அவர்கள் போதித்தது போன்று ஆடை அணிதல், அவர்கள் வுழூ செய்து மீதமாக இருந்த நீரைத் தமது மேனிகளில் எடுத்து தேய்த்துக் கொள்ளுதல் போன்ற செயல்களால் தமது நேசத்தை வெளிப்படுத்தியவர்கள்.

நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் தொழுதது போன்று தொழுதல், உறங்கியது போன்று உறங்குதல், துஆக் கேட்டது போன்று துஆக் கேட்டல் போன்ற இன்னோரன்ன அவர்களின் நடைமுறையாக சுன்னாக்களை அச்சொட்டாக நடைமுறைப்படுத்தியவர்கள்.

இவைதாம் அவர்கள் தமது உயர்ந்த வழிகாட்டியை மதித்து நடந்தமைக்கான முன்மாதிரிமிக்க அளவு கோல்களாகும்.

நபியை ஒருவர் நேசிப்பதற்கான அளவு கோலாக அவர்களின் வழி நடப்பதையே அல்குர்ஆனும் நபிகள் நாயகம் ﷺ அவர்களின் பொன்மொழிகளும் எடுத்துக்கூறுகின்றன.

قُلْ إِن كُنتُمْ تُحِبُّونَ ٱللَّهَ فَٱتَّبِعُونِى يُحْبِبْكُمُ ٱللَّهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ ۗ وَٱللَّهُ غَفُورٌ رَّحِيمٌ ﴿٣١﴾ ﴿آل عمران: ٣١﴾

“(நபியே) நீர் கூறுவீராக! நீங்கள் அல்லாஹ்வை நேசிப்போராக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான். உங்களின் பாவங்களை மன்னிப்பான். அல்லாஹ் மிக்க மன்னிப்போனும் கருணை உள்ளவனுமாவான்.”

(ஆலு இம்ரான்: 31)

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَ ٱللَّهُ عَنْهُ أَنَّ رَسُولَ اللهِ صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ : فَوَالَّذِي نَفْسِي بِيَدِهِ لاَ يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى أَكُونَ أَحَبَّ إِلَيْهِ مِنْ وَالِدِهِ وَوَلَدِهِ. (صحيح البخاري)

“எனது உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்களில் ஒருவரிடம் அவரது தந்தை (பெற்றோர்) பிள்ளைகளைவிட நான் நேசத்திற்குரியவராக மாறாதவரை உங்களில் ஒருவரும் பூரண ஈமான் உள்ளவராக ஆக முடியாது” என்று நபி ﷺ அவர்கள் கூறியதாக அபூஹுரைரா رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

(புகாரி)

வேறு சில அறிவுப்புக்களில் அவரது பெற்றோர், பிள்ளைகள், உலக மக்கள் அனைவரையும்விட நான் நேசத்திற்குரியவராக இருக்காதவரை என இடம் பெற்றுள்ளதைப் பார்க்க முடிகின்றது.

அத்தவ்பா அத்தியாம் 24 வது வசனத்தில் எட்டு வகையான பெறுமதிமிக்க உலகியல் அம்சங்களைக் குறிப்பிட்டு, அவைகள் அல்லாஹ்வையும், அவனது இறுதித் தூதரையும் அவனது பாதையில் போர் செய்வதையும்விட ஒருவரிடம் நேசத்திற்குரியவையாகவும் அவர்களை நேசிப்பதற்கு தடைக் கற்களாகவும் இருக்குமானால் அதற்காக அல்லாஹ் தனது தண்டனையைக் கொண்டு எச்சரித்துள்ளதைப் பார்க்கின்றோம்.

## நபி ﷺ அவர்கள் தனது பிறந்த தினத்தைக் கொண்டாடினார்களா?

நபி ﷺ அவர்கள் பிரதி திங்கள் தோறும் நோன்பு நோற்கும் வழக்கமுடையோராக இருந்தார்கள் அது பற்றி நபித்தோழர்கள் வினவிய போது:

وَسُئِلَ عَنْ صَوْمِ يَوْمِ الاِثْنَيْنِ قَالَ « ذَاكَ يَوْمٌ وُلِدْتُ فِيهِ وَيَوْمٌ بُعِثْتُ أَوْ أُنْزِلَ عَلَىَّ فِيهِ ». (صحيح مسلم : ٢٨٠٤)

“அந்நாளில் நான் பிறந்தேன், அதில்தான் என் மீது (அல்குர்ஆன்) இறக்கியருளப்பட்டது” எனப் பதிலளித்தார்கள். *(முஸ்லிம் 2804)*

முஸ்லிமின் மற்றொரு அறிவிப்பில், “அந்நாளில் நான் நபியாக அனுப்பப்பட்டேன்” எனக் கூறினார்கள்.

***திர்மிதியில்*** இடம் பெறும் அறிவிப்பில் “பிரதி வியாழன், மற்றும் திங்கள் தினங்களில் அடியார்களின் அமல்கள் அல்லாஹ்விடம் எடுத்துக்காட்டப்படுகின்றன. எனவே எனது அமல்களும் நான் நோன்பு நோற்றிருக்கும் நிலையில் அவனிடம் எடுத்துக்காட்டப்பட விரும்புகின்றேன் என்று மற்றொரு காரணம் கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

நபி ﷺ அவர்கள் தனது பிறந்த தினத்தில் எவ்வாறு நடந்து கொண்டார்கள் என்பதை அவர்களின் பிறந்த தினத்தை கொண்டாடும் முஸ்லிம்கள் சிந்திக்க கடமைப்பட்டுள்ளனர்.

திங்கட்கிழமை அமல்கள் அல்லாஹ்விடம் எடுத்துக்காட்டப்படுகின்ற காரணத்தாலும், மேலும் அத்தினத்தில் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் நோன்பு நோற்றுள்ளதாலும் *நபியைப் போன்று நோன்பு நோற்பது அவர்களை நேசிப்பதற்கான அடையாளமாகும்.*

அவர்கள் தனது பிறந்த நாளைக் கொண்டாட வில்லை என்பதற்கு இந்த ஹதீஸை விட ஆணித்தரமான வேறு ஒரு சான்று வேண்டியதில்லை.

عَنْ أَنَسٍ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ لَا يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى أَكُونَ أَحَبَّ إِلَيْهِ مِنْ وَالِدِهِ وَوَلَدِهِ وَالنَّاسِ أَجْمَعِينَ ( أخرجه البخاري: برقم: ١٥)

**"உங்களில் ஒருவர், தனது பெற்றோர், அவரது குழந்தை, உலக மக்கள் அனைவரயும் விட உங்களுக்கு நான் நேசமுள்ளவனாக ஆகாதவரை பூரண விசுவாசியாக முடியாது"** என நபிகள் நாயகம் ﷺ அவர்கள் கூறினார்கள். (புகாரி)

நபி ﷺ அவர்களை உண்மையாகவே நேசிப்பதாக வாதிடுவோர் தாங்களே சுயமாக கண்டு-பிடித்த புதியவழிகளை கடைப்பிடிப்பதை விட்டுவிட வேண்டுமல்லவா? அந்த வழிமுறைகள் யாரால்? எப்போது தோற்றுவிக்கப்பட்டது என்பது பற்றிய போதுமான அறிவு சுன்னா முஸ்லிம்களிடம் கட்டாயம் வரவேண்டும். அப்போதுதான் அவர்கள் அதனைவிட்டும் பூரணமாக விலகுவார்கள்.

## நபித்தோழர்களும் மீலாத் விழாவும்

இரண்டாம் கலீ:ஃபா உமர் رَضِيَ ٱللَّٰهُ عَنْهُ அவர்களின் காலத்தில் நபித்தோழர் அபூ மூஸா அல்அஷ்அரி رَضِيَ ٱللَّٰهُ عَنْهُ அவர்கள் கலீ:ஃபாவிடம் இருந்து வரும் கடிதங்கள் திகதி இடப்படாது இருப்பதைக் காரணமாக முன்வைத்து திகதியிடப்பட்டதாக கடிதப் பரிமாற்றம் நடை பெறவேண்டும் என்பதை வலியுறுத்திக் கேட்டுக் கொண்டார்கள்.

இஸ்லாமிய ஆண்டை எங்கிருந்து துவக்க வேண்டும் என்பது பற்றி ஹிஜ்ரி 17ம் வருடம் கலீ:ஃபா அவர்கள் ஷூரா சபை அங்கத்தவர்களாக இருந்த நபித்-தோழர்களிடம் ஆலோசனை செய்த போது சிலர்,

சத்தியத்தையும் அசத்தியத்தையும் பிரிக்கக் காரணமாக அமைந்த ஹிஜ்ரத் பணயத்தைச் சுட்டிக்காட்டினர். மற்றும் சிலர், ரமளான் மாதத்தையும் இன்னும் சிலர், நபித்துவம் கிடைத்த ஆண்டையும், நபி ﷺ அவர்கள் பிறந்த ஆண்டையும் ஆலோசனையாக முன்வைத்தனர்.

கலீஃபா அவர்கள் நபி ﷺ அவர்களின் பிறந்த நாளில் இருந்து கணிக்காது அவர்களின் “ஹிஜ்ரத்” பயணத்தை கவனத்தில் கொண்டு ஹிஜ்ரி ஆண்டை நிர்ணயம் செய்த நிகழ்வும், நபி ﷺ அவர்களின் பிறந்த தினத்தை முன்னிட்டு ஹிஜ்ரி ஆண்டை நபித்தோழர்கள் நிர்ணயம் செய்யாதிருப்பதும் மீலாத் தினத்திற்கான எவ்வித முக்கியத்துவமும் அவர்கள் மத்தியில் காணப்படவில்லை என்பதை உணர்த்தப் போதுமான சான்றாகும்.

## மௌலிதின் காவலர்கள் ஷீஆக்களே!

நெருப்பு வணங்கிகளான ஈரானியர்களிடம் பல விழாக்கள் இன்றுவரை காணப்படுகின்றது. மௌலித் என்பது அஹ்லுல் பைத்தினர் பெயரில் அறிமுகமானது என்பதே அது தொடர்பான வாசிப்பு பற்றிய முடிவாகும்.

அப்பாஸியர் ஆட்சி பக்தாதில் வீழ்ச்சியடையத் தொடங்கிய போது மைமூன் அல்கத்தாஹ் என்ற யூதனின் பரம்பரையில் வந்த உபைதிய்யாக்கள்

எனப்படுவோர் எகிப்தில் ஷீஆ அரசு ஒன்றை அஹ்லுல் பைத்தினர் பேரில் தோற்றுவித்தனர்.

எகிப்து முஸ்லிம்கள் நபித்தோழர் அம்று பின் ஆஸ் رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்களிடம் இஸ்லாத்தில் இணைந்த மக்களாகும். அவர்கள் நபித்தோழர்கள், தாபியீன்கள், சுன்னா இமாம்கள் வழி வந்த தூய்மையான சுன்னா முஸ்லிம்களாகும்.

இவர்களிடம் இருந்துவரும் தமக்கெதிரான அரசியல் கிளர்ச்சியை, எதிர்ப்புக்களை சமாளிக்கவும், தமது ஆட்சிக்கான நல்லாதரவைப் பெருக்கிக் கொள்ளவும் மவ்லித் நடைமுறை ஹிஜ்ரி நான்காம் நூற்றாண்டு காலப்பகுதியில் இவர்களால் அறிமுகம் செய்யப்பட்டது.

மவ்லித் கொண்டாட்டத்தை உருவாக்கியவர்கள் யார் என்ற கருத்து முரண்பாடே அது பிற்காலத்தில் உருவாக்கப்பட்ட வழிகெட்ட, ஒரு புதிய வழிமுறை என்பதற்குப் போதுமான சான்றாகும்.

இது பற்றிக் குறிப்பிடும் ஆய்வாளர் ஹஸன் நூர் ஹஸன் என்பவர்

أمّا نشأة الاحتفال بالمولد الشريف فمختلف فيه أيضاً بين العلماء، فمنهم من يقول إنّ الاحتفال بدأ في القاهرة أيام الدولة الفاطمية، ومنهم من يقول إنّ ذلك قد أحدثه الملك مظفر صاحب إربل بإربل في آخر القرن السادس أو أوائل القرن السابع. (التأدب مع الرسول في ضوء الكتاب والسنة - تأليف: حسن نور حسن (١ : ١٧٨)

இது எகிப்தை ஆட்சி செய்த ஷீஆ பாதிமிய்யாக்களால் உருவாக்கப்பட்டதாக ஒரு சிலரும், ஈராக்கின் இர்பீல் நகரை ஆட்சி செய்த மன்னர் முளஃப்பர் அவர்கள் ஹிஜ்ரி ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் ஏழாம் நூற்றாண்டின் ஆரம்பித்தில் தோற்றுவித்தார் என்று மற்றும் சிலரும் குறிப்பிடுவதாக சுட்டிக்காட்டி உள்ளார்.

*(ஹஸன் நூர் ஹஸன் - அத்தஅத்துப்)*

ஆனால், ஷீஆக்களின் முக்கிய பிரிவான உபைதிய்-யாக்களே இந்த மீலாத் வழிமுறையை ஹிஜ்ரி 362ல் புதிதாக தோற்றுவித்தனர் என்பது பெரும்பாலான சுன்னா வரலாற்று ஆய்வாளர்களின் கருத்தாகும்.

பிரிவால் வேறுபட்டிருந்த உபைதிய்யாக்களின் இந்த வழிமுறையைச் சரிகண்ட அவர்களின் எதிரிகளான ஷீஆ இஸ்னா அஷரிய்யா என்ற வழிகெட்ட இமாமிய்யா ஷீஆக்கள் இந்த வழிகேட்டை தமக்குச் சாதமாக்கி அதனை உலகில் பரவலாக்கல் செய்தனர் என்பதும் பெரும்பாலான அஹ்லுஸ்ஸுன்னா வல் ஜமாஆ இமாம்களின் மற்றொரு முடிவாகும்.

இஸ்லாமிய ஆய்வாளரான அலி முஹம்மத் அஸ்ஸல்லாபி அவர்கள்,

(سيرة أمير المؤمنين علي بن أبي طالب رَضِيَ ٱللَّهُ عَنْهُ) என்ற நூலில் பின்வரும் தகவலைப் பதிவு செய்கின்றார்.

يذكر أن أول من أحدث الاحتفال بالمزارات السنوية في الأضرحة هم العبيديون (الفاطميون) في القرن الرابع، ذكر ذلك المقريزى أحمد بن على

قال: كانت لهم ستة موالد، مولد النبي - صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ -، مولد على بن أبي طالب، والحسن والحسين، وفاطمة رَضِيَ ٱللَّهُ عَنْهُمْ ، ومولد الخليفة، وكانوا ينحرون عند قبر الحسين الإبل والبقر والغنم ....

(سيرة أمير المؤمنين علي بن أبي طالب - ١ : ٣٨١)

பாதிமிய்யாக்கள் என்ற பெயரில் அறிமுகமான உபைதிய்யா ஷீஆக்களே (மஸாராத்) எனப்படும் (தர்காக்களில்) விழாக் கொண்டாடும் நடைமுறையை ஹிஜ்ரி நான்காம் நூற்றாண்டில் முதலாவதாக தோற்றுவித்தவர்கள்.

1) மவ்லித் நபி

2) அலி மவ்லித்

3) ஹுஸைன் மவ்லித்

4) ஹஸன் மவ்லித்

5) ஃபாத்திமா மவ்லித்

6) மறைந்து வாழும் கலீஃபா (மஹ்தி) மவ்லித்

என ஆறு மவ்லித்களை அவர்கள் உருவாக்கியதோடு ஹுஸைன் رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களின் கப்று என நம்பப்பட்ட கப்ரடியில் ஒட்டகம், மாடு, ஆடு போன்ற கால்நடைகளை அறுப்போராகவும் இருந்தனர் என அஹ்மத் பின் அலி அல் மிக்ரீஸி என்ற அறிஞரை மேற் கோள்காட்டி இந்தச் செய்தியை முன்வைத்துள்ளார்.

குறிப்பு: மறைந்து வாழும் இமாம் என்பவர் ஷீஆக்களின் நம்பிக்கைப்படி ஹிஜ்ரி 255 ல் பிறக்காமல் பிறந்து, அல்லது கற்பனையாகப் பிறக்க வைக்கப்பட்டு ஹிஜ்ரி 260ல் ஈராக்கில் ஸாமிர்ராவில் சுர்ர மன்ரஆ என்ற ஒரு இடத்தில் தனது தந்தை முஹம்மத் பின் ஹஸன் என்பவரின் மரண நாள் முதல் இன்றுவரை வெளிவராது மறைந்து வாழும் பல்லாண்டு கால கற்பனை மஹ்தியாகும்.

1200க்கும் மேற்பட்ட வருடங்கள் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும் தமது மஹ்திக்காகவே ஆறாவது மவ்லிதை ஷீஆக்கள் உருவாக்கினர் என்பது வரலாறு.

ஆய்வாளர் ஸல்லாபி அவர்கள் இது தொடர்பாக பின்வரும் அடிப்படையான முக்கிய தவல் ஒன்றையும் பகிர்ந்து கொள்கின்றார்.

ولم يكن المسلمون قبل هذا التاريخ في القرون الثلاثة الأولى يقيمون الأضرحة، ولا يحتفلون بها، ولا أدل على ذلك من أن أكثر الصحابة رضوان الله عليهم دفنوا خارج البقيع في مصر والشام والعراق، لا تعرف قبورهم، ومن عرف قبره منهم، فمختلف فيه بين المؤرخين، وكُتاب السير، فكيف خفيت قبورهم عن أهل السير، وهم الصلحاء والعلماء وأعلام الهدى، الذين حملوا راية الدين والعلم، والجهاد والعبادة؟ لو كان للأضرحة في زمانهم وزمان تابعيهم ذكر لما خفي مكانها .

( سيرة أمير المؤمنين علي بن أبي طالب – (١ : ٣٨١)

இந்த தினத்திற்கு முன்பதாக ஆரம்ப மூன்று நூற்றாண்டில் வாழ்ந்த முஸ்லிம் மக்கள் தர்காக்கள் அமைப்போராகவோ, அவற்றில் கொண்டாட்டம் கொண்டாடுவோராகவோ இருக்கவில்லை. (நபித்தோழர்களை அல்லாஹ் பொருந்திக் கொள்வானாக!) அவர்களில் பெரும்பாலானவர்கள் மதீனா பகீ:. அடக்கத்தலத்திற்கு வெளியில் எகிப்து, ஷாம், ஈராக் என பல பிரதேசங்களில் அடங்கப்பட்டுள்ளனர். அவர்களின் மண்ணறைகள் இன்றுவரை அறியப்பட்டதாக இல்லை.

அவர்களின் அடக்கத்தலங்கள் எங்கிருக்கின்றன? என்பது பற்றிய முரண்பட்ட கருத்துக்கள் வரலாற்று ஆசிரியர்கள், மற்றும் வாழ்வியல்துறை ஆய்வாளர்கள், அறிவுப்பாரம்பரிய பதிவாளர்கள் மத்தியில் காணப்படுகின்றது என்றால் பேரறிஞர்கள், சீர்திருத்தவாதிகள், நேர்வழியின் அடையாளங்கள் என்ற இந்த மக்களுக்கு அது எப்படி மறைந்திருக்க முடியும் என்பது ஒரு ஆச்சரியமே! அவர்கள் மார்க்க அறிவை சுமந்தவர்கள் மட்டுமல்ல. அவர்கள் போராளிகள், தலைசிறந்த வணக்கசாலிகளும்கூட.

அவர்களின் காலத்தில், அல்லது அவர்களின் பின்னால் வந்த தாபியீன்கள் காலத்தில் நபித்தோழர்களுக்கென தர்காக்கள் இருந்திருக்குமானால் அந்த இடங்கள் அவர்களைவிட்டும் மறைந்திருக்க சாத்தியமில்லை.

*(அலி அஸ்ஸல்லாபி - ஸீரத்து அமீரில் மு:.மினீன் அலி)*

பித்அத்தின் காவலர்களான யூதப் பரம்பரையில் வந்த உபைதிய்யாக்களின் ஆட்சி காலம் பற்றிய ஹிஜ்ரி

567 வது ஆண்டு நிகழ்வுகளின் தொடரில் இமாம் இப்னு கஸீர் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் கருத்து தெரிவிக்கின்ற போது பின்வருமாறு அடிப்படையான மற்றொரு வரலாற்றைப் பதிவு செய்துள்ளார்கள்.

... وقد كان الفاطميون أغنى الخلفاء وأكثرهم مالا، وكانوا من أغنى الخلفاء وأجبرهم وأظلمهم، وأنجس الملوك سيرة، وأخبثهم سريرة، ظهرت في دولتهم البدع والمنكرات وكثر أهل الفساد وقل عندهم الصالحون من العلماء والعباد. (البداية والنهاية – (١٢ : ٣٣٢)

ஹிஜ்ரி 567 வது ஆண்டு உபைதிய்யா ஆட்சியாளன் அல் ஆளிதின் மரணம் நிகழ்ந்த முதலாவது வார ஜும்ஆ நாள் ஒன்று நடந்தது என்ற சரித்திரத் தொடரில்: ….. பாதிமிய்யா மன்னர்கள் கொழுத்த பண முதலைகளாகவும் பெரும் செல்வந்தர்களாகவும் இருந்தனர். அத்துடன், அவர்கள் கலீ.ஃ.பாக்களில் (மன்னர்களில்) பெரிய செல்வந்தர்களாகவும் ரவ்டி-களாகவும், மிகப் பெரும் அநியாயக்காரர்களாகவும் மன்னர்களில் அசிங்கமான நடத்தை உடையாவர்-களாகவும் உள்ரங்கம் கெட்டபாவிகளாகவும் இருந்தனர். இவர்களின் ஆட்சியில் பித்அத்துக்கள், மார்க்க விரோத செயற்பாடுகள் அதிகரித்தது. லஞ்ச ஊளல் அதிகாரிகள் அதிகரித்தனர். இவர்களிடம் நல்ல ஆலிம் உலமாக்கள், வணக்கசாலிகள் என்போர் அரிதாகவே காணப்பட்டனர் எனக் குறிப்பிடுகின்றார்கள். (இப்னு *கஸீர்- அல்பிதாயா வந்நிஹாயா)*

இந்தக் குறிப்பானது மார்க்கத்தில் இல்லாத இவ்வாறான பல புதிய வழிமுறைகளை ஷீஆ ஃபாதிமிய்யாக்கள் என்போர் அஹ்லுல் பைத்தினர் பெயரில் உருவாக்கி இந்த சமுதாயத்தை சீரழித்துள்ளனர் என்பதை உறுதி செய்கின்றது.

## உபைதிய்யா ஆட்சியாளர்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்பு

உபைதிய்யாக்களின் ஆட்சி மொரோக்கோவில் தொடங்கி வடஆபிரிக்கா வரை விரிவடைந்து இறுதியாக எகிப்தில் வீழ்ச்சி அடைந்தது.

அவர்களின் ஆட்சி உபைதுல்லாஹ் என்பவனோடு தொடங்கி இறுதி ஆட்சியாளன் அல்ஆளித் என்பவேனாடு முடிவுற்றது. இமாம் இப்னு கஸீர் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் பின்வரும் தகவலைப் பதிவு செய்துள்ளார்கள்.

واستمرت دولة الفاطميين قريبا من ثلاثمائة سنة حتى كان آخرهم العاضد الذي مات بعد الستين وخمسمائة في الدولة الصلاحية الناصرية القدسية، وكانت عدة ملوك الفاطميين أربعة عشر ملكا متخلفا، ومدة ملكهم تحريرا من سنة سبع وتسعين ومائتين إلى أن توفي العاضد سنة بضع وستين وخمسمائة (البداية والنهاية - (١٣ : ٢٣٩)

பாதிமிய்யா (உபைதிய்யா) க்களின் ஆட்சி கிட்டத்தட்ட 300 ஆண்டுகள் வரை நீடித்தது. அவர்களின் ஆட்சியின்

இறுதி மன்னர் அல்ஆளித் என்வனாகும். அவன் ஹிஜ்ரி 560 க்குப் பின் எகிப்தில் மரணித்ததோடு பாதிமிய்யா பெயரில் தொடங்கப்பட்ட பொய்யாட்சி முடிவுக்கு வந்தது.

இவர்கள் மொத்தம் பதின் நான்கு அரசர்கள் வரை ஒருவர் பின் ஒரவராக ஆட்சி செய்தனர். இவர்களின் ஆட்சி ஹிஜ்ரி 299 முதல் ஆரம்பமாகி அல்ஆளிதின் மரண வருடமாகக் கொள்ளப்படும் ஹிஜ்ரி 560 சொச்சம் ஆண்டுகள் வரை நீடித்திருந்தது.

*(இப்னுகஸீர் - அல்விதாயா வன்நிஹாயா)*

## மௌலித் கடந்து வந்த பாதை

மீலாத் தின கொண்டாட்டம், மவ்லித் பாடல்கள் போன்ற வழிகேடுகள் பற்றி நபித்துவ காலத்தின் பின்னால் வாழ்ந்த நபித்தோழர்களோ, இஸ்லாமிய ஆட்சி செய்த நாட்பெரும் கலீ.ஃ.பாக்களோ, அவர்களின் வழி வந்த முஸ்லிம்களோ அறிந்திடாத ஒரு புதிய சமாச்சராமாகும்.

நபி ﷺ அவர்கள் கூட தான் பிறந்த தினத்தில் நோன்பு நோற்றதும் இரண்டாம் கலீ.ஃ.பா அவர்கள் ஹிஜ்ரத் ஆண்டை இஸ்லாமிய ஆண்டாகப் பிரகடனம் செய்ததும் இக்கருத்தினை உறுதி செய்யப் போதுமான சான்றுகளாகும்.

கலீ.ஃ.பாக்களின் பின்னால் வந்த உமைய்யா மற்றும் அப்பாஸிர் ஆட்சியில் இந்த நடைமுறை இருக்க-வில்லை. அப்பாஸியர் அரசு பலவீனம் அடைந்து,

வணக்கம் சார் நடைமுறை அம்சங்களில் பொடுபோக்கான, தேக்க நிலை உணரப்பட்டது.

முஸ்லிம்கள் தமக்குள் முரண்பட்டு, பல பிரிவுகளாகப் பிரிந்து சிதறிய சந்தர்ப்பத்தை கவனத்தில் கொண்ட யூதப் பரம்பரையினர் வழி வந்த உபைதிய்யாக்கள் தம்மை பாத்திமா رَضِيَ اللَّهُ عَنْهَا அவர்களின் பரம்பரை வழிவந்தோராகவும், அஹ்லுல் பைத்தினரின் அங்கமாகவும் வெளிப்படையாக அடையாளப்படுடத்தி, அப்பாஸிருக்கு எதிராக மொரோக்கோவில் ஷீஆ ஆட்சி ஒன்றைத் தொடக்கினர். பின்னர் அதனை எகிப்தில் விரிவாக்கிக் கொண்டனர்.

அவர்கள் எகிப்தை ஆட்சி செய்து கொண்டிருந்த போதுதான் இந்த வழிமுறையை தோற்றுவித்தனர். உபைதுல்லாஹ் மைமூன் அல்-கத்தாஹ் என்ற உபைதிய்யா ஆட்சியாளன்தான் தற்போது நடைமுறையில் உள்ள மவ்லிதுகளை ஒத்த ஆறு மவ்லிதுகளை உருவாக்கினான் என்பது அஹ்லுஸ்ஸுன்னா இமாம்களின் முடிவாகும்.

ஸஹாபாக்களின் வழிவந்தவர்களான அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்கள் மீலாத், மவ்லித் கொண்டாட்ட நடைமுறைகளைச் செய்யவில்லை என்பதும் இந்தக்காலங்களில் ஆட்சிக்கு வந்த சுன்னா முஸ்லிம் மன்னர்கள் அந்த வழக்கை இல்லாதொழித்ததும் இங்கு கவனிக்கத்தக்கதாகும்.

உபைதிய்யா பாதிமிய்யாக்கள் தமது அரசியலை பாதுகாத்துக் கொள்ள இவ்வாறான வழிமுறைகளை

அரசியல் உக்திகளில் ஒன்றாகத் தொடக்கியது மட்டுமின்றி, முஹம்மத் ﷺ அவர்கள் ரபுஉனில் அவ்வல் பிறை 12ல் யூதர்களான தம்மால் நஞ்சூட்டப்பட்டு மரணித்தார்கள் என்ற மகிழ்ச்சியைக் கொண்டாடவும் இதனை அறிமுகம் செய்தனர். அது இன்று வருடந்தோறும் சமயம் சார்ந்த சர்வதேச விழாவாக மாற்றம் பெற்றுள்ளது என்பதே உண்மை.

## மௌலிதை ஆதிரக்கும் சிலரின் ஆதாரம்

பாதிமிய்யாக்களின் இந்த நடைமுறையை ஆதரித்து ஹிஜ்ரி ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இர்பீல் நகரை ஆட்சி முஸ்லிம் மன்னர் முஸ.ப்பர் என்பவர் மீலாத் தின நிகழ்வுகளை உருவாக்கி மக்களுக்கு இனிப்புப் பதார்த்தங்கள் வழங்கியதையும், அவ்வாறான மன்னர்களின் செயல்களை ஆதரிக்கும் பிற்கால அறிஞர்கள் சிலர் மவ்லித் நடைமுறைக்கு ஆதரவாக நூல்கள் வெளியிட்டதையும் ஆதாரமாகக் கொண்டு சிலர் மீலாத் விழாவிற்கு சாதகமான ஆதாரமாகப் பேசுவதை அவதானிக்க முடிகின்றது.

தொழுகையில் தலைப்பாகை கட்டித் தொழுவதன் சிறப்பை பற்றி வந்துள்ள பொய்யான ஹதீஸ்களை ஆதாரமாக எடுத்து நடைமுறைப்படுத்தும் இவர்கள் இந்தச் செய்திகளை குர்ஆனைப் போன்று ஆதாரமாகக் கொள்ள மாட்டார்களா என்ன?

மவ்லித் பாடி, மீலாது கொண்டாட்டம் நடாத்தும் நமது பிரதேச மவ்லவிகள் மார்க்கம் பற்றி அறியாத பொது மக்களிடம் மேற்படி மன்னரின் நடைமுறையை நபி

صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் செய்தது போன்று பெரிய ஒரு ஆதாரமாக எடுத்துக் கூறி அதை நியாயப்படுத்தினாலும் மவ்லித் தொடர்பாக அவர்கள் எடுத்துவைக்கும் வாதங்கள் அனைத்தும் பலஸ்தீனப் பூமி இஸ்ரேலின் பூமி என்ற வாதத்தை ஒத்ததாகும். அல்லது காணல் நீரை நன்நீர் எனக் கணிப்பது போன்றதாகும்.

ஏனெனில் மவ்லித் கொண்டாட்டம் என்பது நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் செய்து காட்டிய நேரடியான வழிமுறைகளில் ஒன்றா? என்றால் இல்லை. அது ஒரு புதிய வழிமுறை என்பதுதான் பதிலாகும். இரண்டாவது வேறு பதில்கள் அதற்கில்லை.

மீலாத் தின கொண்டாட்டம் நபிகள் நாயகம் صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களின் காலம் முதல் ஹிஜ்ரி நான்காம் நூற்றாண்டு வரை இஸ்லாமிய மார்க்கத்தில் அறிமுகமான ஒன்றாக இருந்திருக்கவில்லை.

மாற்றமாக, ஃபாதிமிய்யாக்கள் (ஃபாதிமா رَضِيَ ٱللَّهُ عَنْهَا அவர்களின் பரம்பரையில் வந்தவர்கள் என தமக்கு பொய்நாமம் சூடிக் கொண்ட) "பனுஉபைத்" கூட்டத்தினர் பக்தாதிலுள்ள அப்பாஸியர் ஆட்சியை எதிர்த்து எகிப்தில் கிளர்ச்சி செய்து அங்கு ஆட்சியைக் கைப்பற்றிய போது தமது அரச நிருவாகத்தின் கீழ் வாழும் மக்களுக்கு ஏற்படும் அதிருப்தியை சமாளிக்கவும், தமது ஆட்சியை தக்கவைத்துக் கொள்ளவும், மக்கள் தமக்கெதிராக புரட்சியில் ஈடுபடாமலிருக்கவும் மக்களின் கவனத்தை தம்பக்கம் ஈர்ப்பதற்காகவுமே "மவ்லிதுன் நபி" "மவ்லிது அலி"

“மவ்லிது ஹஸன்” “மவ்லிது ஹுஸைன்” மவ்லிது ஃபாதிமா” “மவ்லிது கலீபதில் ஹாழிர் (மறைந்து வாழும் இமாம் மவ்லித்) என ஆறு மவ்லித்களை முதல் முதலாக உருவாக்கினர்.

இதை நவீன காலத்து மவ்லித்களில் இருந்து முற்றிலும் வேறுபட்டதாக இருப்பினும்; பித்அத், இணைவைப்பு என்பவற்றில் இரண்டும் ஒரு தாய் மக்களே.

இந்த உபைதிய ஆட்சியாளனே அதானில் حي على خير العمل “ஹய்ய அலாகைரில் அமல்” என முதல் முதலில் ஷீ வாசம் தாங்கிய வாசகத்தை இணைத்து பாங்கில் மாற்றம் செய்தவன்.

இவனைத் தொடர்ந்து “முயிஸ்ஸுத் தவ்லா” என அழைக்கப்படும் இவனது மகன் அதனைப் பேணி வந்தான். இவனது ஆதரவாளர்கள் இவனை பிற்காலத்தில் வெளிவரவிருந்த மஹ்தி என்றும் கூறிவந்தனர்.

இவர்களுக்குப் பின் ஆட்சியில் அமர்ந்த “சுன்னத் வல்ஜமாஅத்” ஆதாரவாளரான “அல் அஃப்ழல்” அமீருல்ஜுயூஷ் பின் பத்ர் அல்ஜமாலி” என்பவரால் நடைமுறையில் இருந்து வந்த மவ்லித் ஹிஜ்ரி: 448ல் ஒழிக்கப்பட்டது.

மவ்லித் வழிமுறை இஸ்லாமாக, நபி ﷺ அவர்களின் உண்மையான வழிமுறைகளில் ஒன்றாக,

அல்லது நபித்தோழர்கள் ஆர்வம் காட்டிய ஒரு வழிமுறையாக இருந்திருக்குமாக இருந்தால் இந்த மன்னர் ஒழிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்குமா? என்று சிந்திக் வேண்டும்.

இவர் ஒழித்து சில காலம் முதல் முஸ்லிம் உலகில் மவ்லித் கொண்டாட்டம் என்பது இல்லாதிருந்து, அதன் பின்னர், "ஷீஆ" கொள்கையாளரான "அல்ஆமிர் -பி-ஆஹ்காமில்லாஹ்" என்ற உபைதிய்யா ஆட்சியாளனால் ஹிஜ்ரி 524ம் வருடம் அது மீண்டும் புத்துயிரூட்டப்-பட்டது. இதுவே மவ்லித் பற்றிய சுருக்கமான வரலாறாகும்.

மேற்படி தகவல்களை ஷா∴பி மத்ஹப் பெரறிஞர் இமாம் அபூஷாமா அல்மக்திஸி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் தனது "அர்ரவ்ழதைன் ∴பீ அக்பாரித்தவ்லதைன்" என்ற நூலிலும், இமாம் அல்மிகரீஸி என்பவர் الخطط என்ற தனது பெறுமதியான நூலிலும் குறிப்பிடுவதாக மவ்லித் ஆய்வறிஞர்களால் சுட்டிக்காட்டப்படுகின்றது.

மவ்லிதின் உண்மை நிலையை விளக்கும் ஹிஜ்ரி 734ல் மரணமான ஷா∴பி மத்ஹப் அறிஞர்களில் ஒருவரான இமாம் தாஜுத்தீன் அல்∴பாகிஹானி رَحِمَهُ ٱللَّهُ அவர்களின் பின்வரும் பதிலைக் கவனியுங்கள்.

فقلت وبالله التوفيق: لا أعلم لهذا المولد أصلاً في كتاب ولا سنة، ولا ينقل عمله عن أحد من علماء الأمة، الذين هم القدوة (المورد في عمل المولد للفاكهاني –رحمه الله المتوفى سنة ٧٣٤هـ)

இமாம் பாகிஹானி رَحِمَهُ ٱللَّهُ அவர்களிடம் மவ்லித் தொடர்பாகக் கேட்கப்பட்டபோது அல்லாஹ்தான் நற்பாக்கியம் தர வேண்டும் எனக் கூறி பின்வருமாறு பதிலளித்தார்கள்.

இந்த மல்லித் நடைமுறைக்கு குர்ஆனில் இருந்தோ, அல்லது சுன்னாவில் இருந்தோ நேரடியான ஆதாரத்தை நான் அறியமாட்டேன். இந்த உம்மத்தின் உலமாக்-களான முன்மாதிரிமிக்கோரில் ஒருவர் கூட இதனைச் செய்ததாக எந்த சான்றும் தரப்படவில்லை. (இமாம் அல்பாகிஹானி- அல்மவ்ரித் ஃபீ அஹ்காமில் மவ்லித்), அவர்கள் மற்றோர் இடத்தில் குறிப்பிடுகின்ற போது:

قال الإمام أبو حفص تاج الدين الفاكهاني رحمه الله: أما بعد : فقد تكرر سؤال جماعة من المباركين عن الاجتماع الذي يعمله بعض الناس في شهر ربيع الأول ويسمونه المولد – هل له أصل في الدين ، وقصدوا الجواب عن ذلك مبينا والإيضاح عنه معينا ، فقلت وبالله التوفيق : لا أعلم لهذا المولد أصلا في كتاب ولا سنة ولا ينقل عمله عن أحد من علماء الأمة الذين هم القدوة في الدين ، المتمسكون بآثار المتقدمين ، بل هو بدعة أحدثها البطالون ، وشهوة نفس اغتنى بها الأكالون . (المورد في عمل المولد للفاكهاني – رحمه الله المتوفى سنة ٧٣٤هـ)

இந்த மவ்லிதிற்கு அல்குர்ஆனிலோ நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களின் வழிமுறையிலோ எவ்வித அடிப்படையையும்

நாம் அறியமுடியாதுள்ளது. மேலும் முன்னோர்கள் வழிநடக்கும் மார்க்கத்தின் முன்மாதிரிகளான, இந்த சமூகத்தில் பின்பற்றத்தக்க அறிஞர்கள் ஒருவர்கூட அதைச் செய்தற்கான எந்த ஒரு (ஆதாரபூர்வமான) செய்தியும் இடம்பெறவில்லை.

மாற்றமாக அதனை உபைதிய்யாக்கள் என்ற வீணர்கள்தாம் புதிதாக உருவாக்கினர். பேராசை மோகம் பிடித்த, உணவில் அதிக நாட்டம் உடையோர் அதனை ஒரு சந்தர்ப்பமாக்கி அதற்கு (முன்னுரிமை வழங்கி) கட்டிக்காத்தனர் எனக் குறிப்பிட்டுள்ளார்கள். *(இமாம் அல்பாகிஹானி - அல்மவ்ரித் ∴பீஅஹ்காமில் மவ்லித்)*

## நரகவாதி அபூலஹபின் நரகக் கனவு மீலாதுக்கு ஆதாரமாகுமா?

நபி ﷺ அவர்கள் பிறந்ததை தன்னிடம் தனது அடிமைப் பெண் துவைபா தெரிவித்ததும், அது பற்றி மிகிழ்ச்சியுற்று, அவளை அபூலஹப் விடுதலை செய்ததாகவும், அனதால் நரிகில் இருக்கும் அவனது இரு விரல்களுக்கும் இடையில் நீர் சுரப்பதாகவும், அதை தான் பருகி வருவதாகவும் மீலாத் கொண்டாட்டத்தை நியாயப்படுத்தும் மவ்லவிகள் பலர் இன்றும் பொதுமக்களிடம் கூறி வருவதைப் பார்க்கின்றோம்.

அத்துடன், இமாம் புகாரியின் கிரந்தத்தில் வருவதைக் கூட இந்த மௌலித் எதிர்ப்பாளர்கள் மறுக்கின்றனர்.

இவர்கள் அபூலஹபை விட மோசமானவர்கள் எனக் குற்றம் சுமத்தி தமது செயலை நியாயப்படுத்துவது இவர்களின் மற்றொரு ஆதாரமாகும். எனவே அந்தச் செய்தியின் உண்மை நிலை பற்றியும் நாம் இங்கு அறிந்திருப்பது அவசியமாகும்.

*பதில்:*

நபி ﷺ அவர்களின் பெற்றோர் நரகவாதிகள் என இமாம் முஸ்லிமின் கிரந்தத்தில் இடம் பெறும் ஆதாரபூர்வமான செய்தியை நம்பாத இவர்கள், கப்றுகளைக் கட்டி வணங்குவது யூத கிரிஸ்வர்களின் வழிமுறை என்பதாக அறிவிக்கும் புகாரி, முஸ்லிம் கிரந்தங்களில் வரும் பல ஹதீஸ்களை மறுக்கும் இவர்கள் தமக்குச் சாதகமானதாகத் தென்பட்ட ஆதாரமற்ற இந்தச் செய்தியை பெரியதொரு ஆதரமாக வேறு எடுத்து மீலாத் கொண்டாடும் இவர்களின் ஆதாரம் கட்டாயம் ஆராய்யப்படல் வேண்டும் என்பதில் இரு கருத்துக்கு இடமில்லை.

**அந்தவகையில் பதிலை பின்வருமாறு கவனியுங்கள்**

இமாம் புகாரி رَحِمَهُ ٱللَّٰهُ அவர்களின் கிரந்தத்தில் பால் குடிச் சகோதரிகளை மணத்தல் தொடர்பாக நம்பகமான அறிவிப்பாளர்ளோடு இடம் பெறும் ஹதீஸ் பூர்த்தியான நிலையில் இந்த சம்பவம் அதன் கீழ் அறிவிப்பாளர் வரிசை பூர்த்தி செய்யப்படாது, தொடர் அறுந்த நிலையில் இடம் பெற்றுள்ளது.

***ஷாமிலா நூலகம்:*** 5101 வது இலக்கமான அந்த ஹதீஸின் இறுதியில் பாலூட்டுதல் தொடர்பான அத்தியாயத்தில் பின்வரும் அமைப்பில் இடம் பெறுகின்றது.

இமாம் புகாரியின் கிரந்தத்தில் அறிவிப்பாளர் பூர்த்தி இல்லாத நிலையில் அறிவிக்கப்படும் செய்திகளில் இதுவும் ஒன்றாகும். இப்போது செய்தியையும் அதன் அமைப்பையும் கவனியுங்கள்.

قَالَ عُرْوَةُ وَثُوَيْبَةُ مَوْلاَةٌ لأَبِي لَهَبٍ كَانَ أَبُو لَهَبٍ أَعْتَقَهَا فَأَرْضَعَتِ النَّبِيَّ ﷺ فَلَمَّا مَاتَ أَبُو لَهَبٍ أُرِيَهُ بَعْضُ أَهْلِهِ بِشَرِّ حِيبَةٍ قَالَ لَهُ مَاذَا لَقِيتَ قَالَ أَبُو لَهَبٍ لَمْ أَلْقَ بَعْدَكُمْ غَيْرَ أَنِّي سُقِيتُ فِي هَذِهِ بِعَتَاقَتِي ثُوَيْبَةَ.

( أخرجه البخاري برقم/ ٥١٠١)

உர்வா சொன்னார்: துவைபா என்பவர் அபூலஹபின் அடிமைப் பெண். அபூ லஹப் இந்தப் பெண்ணை விடுதலை அளித்திருந்தான். நபி ﷺ அவர்களுக்கு இந்தப் பெண் பாலூட்டினார். அபூலஹப் மரணித்த பின்னால் அவனது குடும்பத்தில் சிலரது கனவில் (அதிர்ச்சி தரும்வகையில்) தீய கோலத்தில் அவன் காட்டப்பட்டான். அவன் உங்களை விட்டும் பிரிந்து சென்ற பின்னால் இந்த மோசமான நிலைதான் எனக்கு ஏற்பட்டுள்ளது. இருப்பினும், நான் துவைபாவை விடுதலை செய்த காரணத்தால் இந்த விரல்களுக்கிடையில் (நரகில்) நீர் புகட்டப்பட்டேன்

எனக் கூறினான். (இது புகாரியில் இடம்பெறும் அறிவிப்பாளர்கள் பூரணமற்ற ஒரு தகவலாகும்.)

**அதன் விளக்கம் என்ன?**

## அறிவிப்பாளர் உர்வா என்பவர் யார்?

இவர் குரைஷியப் பரம்பரையில் வந்த நபித்தோழர் சுபைர் பின் அவ்வாம் رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களின் புதல்வர்களில் ஒருவராகும். இவர் அப்துல்லாஹ் பின் சுபைரின் உடன் பிறந்த சகோதரர். மார்க்கத்தை சிறப்பாகக் கற்ற சங்கையானவர்களில் ஒருவரும், மதீனாவில் ஏழு புகஹாக்களில் ஒருவரும் கூட.

இவர் ஹிஜ்ரி 22-ல் மதீனாவில் பிறந்து இடையில் பல பயணங்கள் மேற்கொண்டு பஸரா, எகிப்து போன்ற தூரப் பிரதேசங்களில் வாழ்ந்தார்கள். பஸராவுக்குச் சென்று பின்னர் அங்கிருந்து எகிப்துக்கு குடிபெயர்ந்து அங்கு திருமணம் முடித்தார்கள்.

மீண்டும் மதீனா வந்தடைந்த அவர் ஹிஜ்ரி 93ல் அங்கு மரணமானார்கள். அக்காலத்தில் நிகழ்ந்த குழப்பங்கள் எதிலும் அவர் கலந்து கொள்ளவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தனது இறுதி காலத்தில் மதீனாவுக்கும் மீண்டும் குடிபெயர்ந்து வந்து அங்கு மரணித்தார்கள். (அல்லாஹ் அவர்களைப் பொருந்திக் கொள்வானாக!)

*(அல்அ.்.லாம் - அஸ்ஸர்கலி)*

இமாம் புகாரி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் தனது கிரந்தமான புகாரியில் பதிவு செய்துள்ள மேற்படி செய்தியில் உர்வா رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் முதன்மை அறிவிப்பாளராக இடம் பெறுகின்றார்கள். அதற்காக அது ஸஹீஹ் என்ற முடிவுக்கு உடனே வராமல் கொஞ்சம் தொடர்ந்து வாசியுங்கள்.

## புகாரியில் இடம் பெறும் செய்திகள் இரண்டு வகைப்படும்

***முதலாவது வகை:*** அறிவிப்பாளர் தொடர் முழுமையாக இடம் பெறும் செய்திகள், இதற்கு உதராணமாக புகாரியில் இடம் பெறும் நிய்யத் தொடர்பான செய்தியை நீங்கள் பார்க்க முடியும். அதன் தொடர் பின்வரும் அமைப்பில் இடம் பெறுகின்றது.

حَدَّثَنَا الحُمَيْدِيُّ عَبْدُ اللهِ بْنُ الزُّبَيْرِ، قَالَ: حَدَّثَنَا سُفْيَانُ، قَالَ: حَدَّثَنَا يَحْيَى بْنُ سَعِيدٍ الأَنْصَارِيُّ، قَالَ: أَخْبَرَنِي مُحَمَّدُ بْنُ إِبْرَاهِيمَ التَّيْمِيُّ، أَنَّهُ سَمِعَ عَلْقَمَةَ بْنَ وَقَّاصٍ اللَّيْثِيَّ، يَقُولُ: سَمِعْتُ عُمَرَ بْنَ الخَطَّابِ رَضِيَ ٱللَّهُ عَنْهُ عَلَى المِنْبَرِ قَالَ: سَمِعْتُ رَسُولَ اللهِ صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ: " إِنَّمَا الأَعْمَالُ بِالنِّيَّاتِ.

(صحيح البخاري)

இதில் இமாம் புகாரியின் அறிவிப்பாளர்களாக:

1) ஹுமைதி என்ற அப்துல்லாஹ் பின் ஸுபைர்,

2) சுஃப்யான் பின் உயைனா,

3) எஹ்யா பின் ஸயீத் அல்அன்ஸாரி,

4) முஹம்மத் பின் இப்ராஹீம் அத்தைமி,

5) உமர் பின் கத்தாப் رَضِيَ ٱللَّٰهُ عَنْهُ அவர்கள்,

6) அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் என்ற வஹி அறிவிப்பாளர் என பூரணமான அறிவிப்பு போன்ற அமைப்பில் உர்வாவின் செய்தி இடம் பெறவில்லை என்பது கவனிக்கத்தக்கதாகும்.

எனவே அறிவிப்பாளர்கள் முழுமையான இவ்வாறான செய்திகளை இமாம்கள் (அல்முத்தஸிலாத் المتصلات) அறிவிப்பளார்கள் முழுமையாக இடம் பெற்றவை என்ற பொருளில் அழைக்கின்றனர்.

இவ்வாறு இடம்பெறும் அறிவிப்புக்கள் அனைத்தும் ஆதாரபூர்வமானது என்பதில் இரண்டாம் கருத்துக்கு இடமில்லை. எனவே இவ்வாறான ஹதீஸ்களைக் கொண்டே ஆதாரம் எடுக்க வேண்டும்.

***இரண்டாவது வகை:*** அறிவிப்பாளர் முழுமைப்படுத்தப்படாத, அறிவிப்பாளர்கள் ஆரம்பத்தில், அல்லது இடை நடுவில் அல்லது இறுதியில் விடுபட்ட செய்திகள் என இருவகையான செய்திகள் இடம் பெறும்.

அவற்றில் மேற்படி செய்தியானது இரண்டாம் வகை சார்ந்தாகும். இவ்வாறான செய்திகளை "معلقات முஅல்லகாத்" என அறிஞர்கள் அழைக்கின்றனர். இவ்வாறான செய்திககள் புகாரியில் மாத்திரம் 1300

ஹதீஸ்கள் வரை இடம் பெற்றுள்ளதாக இமாம்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

இமாம் புகாரி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் தனது கிரந்தத்தில் உர்வா என்பவர் சொன்னார் என மொட்டையாக அறிவிப்பதற்கும், ஹுமைதி என்ற தனது ஆரிசியர் தனக்கு ஹதீஸாக அறிவித்தார்கள் என்று அறிவிப்பதற்கும் இடையில் காணப்படும் அடிப்படையான அறிவு பற்றிய தெளிவுதான் இந்த செய்தியில் பேசு பொருளாகும்.

இப்போது துவைபா தொடர்பான செய்தி என்ன அமைப்பில் இடம் பெற்றுள்ளது என்று நீங்களே முடிவு செய்யலாம். இது போன்ற அறிவிப்புக்கள் தொடர்பாக இமாம்களின் கருத்துரைகளும் இதுவாகும்.

புகாரியில் இவ்வாறு இடம் பெறக்காரணம் என்ன?

இமாம் புகாரி رَحِمَهُ ٱللَّهُ அவர்களின் கிரந்தத்தில் இவ்வாறான செய்திகள் இடம்பெறுவதற்கான காரணம் பற்றி ஆய்வு செய்த அறிஞர்கள் முன்வைக்கும் முக்கிய காரணிகளாக:

1) அறிவிப்பாளர்களை புகாரியில் மற்றோர் இடத்தில் பதிவு செய்துள்ளமை.

2) நபித்தோழர்கள், தாபியீன்கள் என்போர் வரையான அறிவிப்பாளர்கள் அனைவரையும் மீண்டும் மீண்டும் எழுத்தில் கொண்டு வருவதனால் நூலின் அளவு விரிவடைதல்.

3) ஸஹீஹ் என்ற தனது நிபந்தனைகளுக்கு அப்பாற் பட்டதாக புகாரி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் அவற்றைக் காணுதல் இப்படிப் பல காரணங்கள்.

4) இவ்வாறான செய்திகள் அனைத்தும் அடிப்படையான செய்திகளோடு தொடர்புபடுத்தப்பட்டு பேசப்படாமல் அடிப்படையான செய்திகள் முடிந்து அவற்றின் இறுதியில் ஒரு தகவலை எடுத்துக் காட்டும் முகமாகவும் இணைச் செய்திகளாகவும் அறிவிக்கப்பட்டிருக்கின்றன.

**இவ்வாறான செய்திகளை என்ன செய்ய வேண்டும்?**

இவ்வாறான வகையுடன் தொடர்புடைய அறிவிப்புக்கள் தொடர்பாக இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் குறிப்பிடுகின்ற போது

هو أي التعليق مفتقر إلى أن يصنف فيه كتاب يخصه تسند فيه تلك المعلقات وتبين درجتها من الصحة والحسن أو غير ذلك من الدرجات وما علمت أحدا تعرض لتصنيف في ذلك وإنه لمهم لا سيما لمن له عناية بكتاب البخاري من بدء فتح الباري - ابن حجر - (١ : ٢٠)

த.்.லீக் என்ற இந்த வகை சார்ந்த செய்திகள் அறிவிப்பாளர்கள் இணைக்கப்பட்டதாகவும் அதன் தரம் ஸஹீஹ், அல்லது ஹஸன் அல்லது அதற்கு கீழான நிலைகள் பற்றியும் விளக்கும் ஒரு நூல் கோர்வை செய்யப்பட்டு கொண்டுவரப்படவேண்டிய தேவை இருக்கின்றது.

ஆனால் யாரும் அவ்வாறு செய்ததாக நான் அறியவில்லை. இது கட்டாயமான ஒரு பணியாகும். குறிப்பாக புகாரி கிரந்தத்தோடு ஈடுபாடுள்ளவர்கள் வஹி தொடர்பான அத்தியாயத்திலிருந்து தொடங்கி இந்தப் பணியை செய்ய வேண்டும். (فتح الباري - ابن حجر)

***குறிப்பு:*** இது தொடர்பாக அதிகப்படியான தகவல்களை இமாம் இப்னு ஹஜர் رَحِمَهُ ٱللَّهُ அவர்களின் ஃபத்ஹுல் பாரியின் முன்னுரையில் இருந்தும் உசூல் தொடர்பான ஏனைய இமாம்களின் நூல்களிலிருந்தும் அறிந்து கொள்ள முடியும்.

எனவே இவற்றின் அறிவிப்பளார்களை ஆய்வு செய்தே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது ஹதீஸ்கலை இமாம்களின் முடிவாகும்.

அந்த வகையில் ஹதீஸ் துறையில் பிரசித்தி பெற்ற இமாம் புகாரியின் கிரந்தத்திற்கு விளக்கவுரை எழுதிய இமாம் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் இந்தச் செய்தியை பதிவு செய்தள்ளதோடு அதன் தரம், உண்மைத் தன்மை, அறிவிப்பாளர் நிலை பற்றி பொதுவாக விமர்சனம் செய்துள்ளதையும் அறிகின்றோம். அது பற்றி இங்கு சற்றுக் கவனிப்போம்.

وذكر السهيلي أن العباس قال لما مات أبو لهب رأيته في منامي بعد حول في شر حال فقال ما لقيت بعدكم راحة الا أن العذاب يخفف عني كل يوم اثنين قال وذلك أن النبي صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ ولد يوم الإثنين وكانت ثويبة بشرت أبا لهب بمولده فاعتقها. (فتح الباري - ابن حجر - (٩ / ١٤٥ )

அதாவது அபூலஹப் மரணித்த போது அவனை அப்பாஸ் பின் அப்தில் முத்தலிப் رَضِيَ ٱللَّهُ عَنْهُ (இஸ்லாத்தை தழுவும் முன்) கனவில் மிகவும் மோசமான கோலத்தில் கண்டார்களாம். அவன் உங்களைப் பிரிந்த பின்னால் அமைதியை என்னால் உணர முடியவில்லை என்றும், இருப்பினும் (தனது அடிமைப் பெண்ணாகிய துவைபாவை விடுதலை செய்ததன் விளைவாக) ஒவ்வொரு திங்களும் தன்னை விட்டும் நரக வேதனை சற்றுக் குறைக்கப்படுவதாகவும் கூறினானாம்.

முஹம்மத் صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் பிறந்ததை அபூலஹபிடம் எடுத்துக் கூறியதற்காக மகழ்ச்சி உற்ற அவன் அவளை விடுதலை செய்ததன் காரணமாக தனக்கு இந்த நிலை என்றும் கூறியதாக இமாம் இப்னு ஹஜர் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் இமாம் ***அஸ்ஸுஹைலி*** என்பவர் குறிப்பிட்டதாகக் குறிப்பிட்டுள்ளதோடு சில வரலாற்று ஆசிரியர்கள் ஒவ்வொரு திங்கள் இரவும் அவனுக்கு வேதனை குறைக்கப்படுவதாகவும், அவனது விரல்களின் இடுக்களின் ஊடாக ஊடறுத்து வரும் நீரை அவன் அருந்திக் கொள்வதாகவும் அந்தப் பெண் மூலம் அவன் முஹம்மத் நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களுக்கு பாலூட்டிய-தற்காகவும் இந்தச் சலுகை அளிக்கப்பட்டதாகவும் குறிப்பிடுகின்றனர் என்ற விளக்கத்தை எடுத்தெழுதி இதன் நிலை, தரம் பற்றி பின்வருமாறு விளக்கு-கின்றார்கள்.

*தெளிவு:* காபிர்கள் செய்கின்ற அமல்கள் அல்லாஹ்வால் அங்கீகரிக்கப்படுவதில்லை என்பதை

அல்குர்ஆனும் நபி ﷺ அவர்களின் பொன்மொழிகளும் உணர்த்தி உள்ள நிலையில் இவ்வாறான செய்திகளின் தரம், மற்றும் அதன் நம்பகத்தன்மை பற்றி ஆய்வு செய்வது அவசியமாகும்.

இமாம் இப்னு ஹஜர் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் இது தொடர்பாக மேலும் விளக்கம் தருகின்ற போது இன்னும் பல விளக்கங்கள் அளித்துள்ளதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

وأجيب أولا بان الخبر مرسل أرسله عروة ولم يذكر من حدثه به وعلى تقدير أن يكون موصولا فالذي في الخبر رؤيا منام فلا حجة فيه ولعل الذي رآها لم يكن إذ ذاك أسلم بعد فلا يحتج به.

***முதலாவது அம்சம்:*** இந்தச் செய்தி முர்ஸல் என்ற தரத்தில் உள்ளதாகும். அதாவது உர்வா என்ற தாபியீ அவர்கள் தனக்கு யார் இந்தச் செய்தியை அறிவித்தார் என்று குறிப்பிடவில்லை.

நபி ﷺ அவர்களைக் காணாத, ஸஹாபியைக் கண்ட, அவரிடம் பாடம் படித்த ஒருவருக்கு தாபியீ என்று சொல்லப்படும். அவர் சந்திக்காத, காணாத ஒருவரிடம் இருந்து அவர் சொன்னதாக எப்படிக் குறிப்பிட முடியும்? எனவே இந்தச் செய்தி தொடர் அறுந்த செய்தியாகும்.

இந்தச் செய்தி அறிவிப்பாளர் தொடர் பூரணமானது என ஒரு வாதத்திற்கு வைத்துக் கொண்டாலும் அது

காபிராக இருந்த ஒருமனிதரின் கனவு தொடர்பான அம்சம்தான். எனவே அதனை ஆதாரமாகக் கொள்ள முடியாது. ஏனெனில் அது பற்றி அறிவிப்பவர் இஸ்லாத்திற்கு முன்னதாக அறிவித்துள்ளார். எனவே அதனை ஆதாரமாகக் கொள்ள முடியாது. நிராகரிக்க வேண்டும்.

وثانيا على تقدير القبول فيحتمل أن يكون ما يتعلق بالنبي ﷺ مخصوصا من ذلك بدليل قصة أبي طالب كما تقدم أنه خفف عنه فنقل من الغمرات إلى الضحضاح (فتح الباري - ابن حجر - ٩ / ١٤٥)

***இரண்டாவது அம்சம்:*** ஒரு வாதத்திற்கு இந்தச் செய்தியை ஏற்றுக் கொள்ளலாம் என எடுத்துக் கொண்டால் அது நபி ﷺ அவர்கள் அபூதாலிபுக்கு சிபாரிசு செய்த போது நகரத்தின் கரைக்கு கொண்டுவரப்பட்ட அபூதாலிப் அவர்களை நரகில் இருந்து வெளியே கொண்டுவர முடியாதது போன்ற நபி ﷺ அவர்களுக்குரிய விஷேடமான சிபாரிசு சார்ந்த தனித்துவமான செய்தியாகப் பார்க்கப்படல் வேண்டும்.

***மூன்றாவதாக:*** முர்ஸலான தரத்தில் அமைந்த செய்திகள் பற்றி விளக்கும் ஹதீஸ்கலை இமாம்கள் :

إن صاحب هذه الرؤيا هو العباس بن عبد المطلب والذي رواها عنه بالواسطة فالحديث إذا مرسل ، والمرسل لا يحتج به ولا تثبت به عقيدة ولا عبادة ، مع احتمال أن الرؤيا رآها العباس قبل إسلامه ورؤيا الكافر حال

كفره لا يحتج بها إجماعا. (الإنصاف فيما قيل في المولد من الغلو والإجحاف
المؤلف : أبو بكر جابر الجزائري)

இந்தக் கனவின் கதாநாயகன் அப்பாஸ் பின் அப்துல் முத்தலிப் ஆவார். இவரிடம் இருந்து செய்தியை அறிவித்தவர் இவர் ஊடாக அறிவித்து யார் சொன்னார் என்பதை விட்டு விட்டு அறிவித்துள்ளார். எனவே இவரைச் சந்திக்காத உர்வாவின் செய்தி முர்ஸல் என அழைக்கப்படும்.

முர்ஸல் தரத்தில் உள்ள செய்தியை மார்க்கத்தில் ஆதாரத்திற்கு கொள்ளாமல் இருப்பது ஒரு புறம் இருக்க, இந்தச் செய்தியினை அகீதா (அடிப்படை நம்பிக்கை) மற்றும் வணக்கம் வழ்பாடுகள் தொடர்பான சட்டத்தை நிலை நிறுத்த ஒரு போதும் ஆதாரமாகக் கொள்ள முடியாது.

அதுமாத்திமின்றி, காபிரான நிலையில் வாழ்ந்த ஒருவர் இஸ்லாத்திற்கு வருவதற்கு முன்னதாகக் கண்ட கனவை இமாம்கள் ஏகமனதாக அங்கீகரிப்பதில்லை.

*(அபூபகர் ஜாபிர் அல்ஜஸாயிரி - அல்இன்ஸா.ஃ.ப்)*

**குறிப்பு:** அகீதா தொடர்பான அம்சங்களில் ஆஹாத் வகை சார்ந்த அறிவிப்புக்களை ஏற்காத மவ்லித் ஆதரவு மவ்லவிகள் ஒரு காபிரின் கனவை அதுவும் ஆதாரமாகக் கொள்ள முடியாது என இமாம்களால் தீர்ப்பளிக்கப்பட்ட ஒரு செய்தியை எப்படி ஆதாரமாகக் காட்ட முடியும்? இது கொள்கையில் முரண்பாடில்லையா? என சிந்திக்க வேண்டும்.

***நான்காவதாக:*** அபூ லஹபுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி குடும்பப் பாசத்தினால் ஏற்பட்டதாகும். அதனை இந்த நிகழ்வோடு தொடர்புபடுத்த வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் ஒருவர் தனது சகோதர, சகோதரிகளுக்கு குழந்தைகள் பிறக்கின்ற போது சந்தோசம், மகிழ்ச்சி அடைவது இயல்பானதாகும்.

இதனைக் கொண்டு புதிய பித்அத் ஒன்றிற்கு சப்பைக்கட்டுக் கட்டுவது எந்த வகையிலும் அங்கீகரிக்க முடியாதது மட்டுமின்றி, அது எந்தப் பெறுமானமும் அற்ற வாதமாகும்.

இதன் மூலம் மீலாத், மவ்லித் என்பதற்கு வலிந்து கூறப்படும் விளக்கங்களும் ஏற்புடையதாகவோ, ஆதாரமாகக் கொள்ள முடியுமானதோ அல்ல என்பதை அறிந்து கொள்ள முடியும்.

முடிவாக உருவாவின் செய்தி புகாரியில் வேறு அறிவிப்பாளர் வரிசைகளில் பூரணமான அறிவிப்பாளர்-களைக் கொண்டு இடம்பெறாத அறிவிப்பாளர் தொடர் அறுந்த அறிவிப்பாகும். எனவே அதனை ஆதாரமாக் கொள்ள முடியாது.

## இணைவைப்போர், காபிர்கள் என்போரின் அமல்கள் அங்கீரிக்கப்படுவதில்லை.

காபிர்களின் அமல்கள் அல்லாஹ்விடம் எந்தப் பெறுமானமும் அற்றதாகும். அவை அல்லாஹ்வால் அங்கீகரிப்படுவதுமில்லை என்பதை பின்வரும் குர்ஆன் வசனங்கள் மற்றும் ஹதீஸ்கள் தெளிவுபடுத்துகின்றன.

இந்தக் கருத்தினை அறிஞர்களான முன்னோர்கள் மற்றும் பின் வந்த அனைவரும் சரி கண்டுள்ளனர். அதுவே இஸ்லாத்தின் இறுக்கமான நிலைப்பாடாகும்.

وَلَقَدْ أُوحِىَ إِلَيْكَ وَإِلَى ٱلَّذِينَ مِن قَبْلِكَ لَئِنْ أَشْرَكْتَ لَيَحْبَطَنَّ عَمَلُكَ وَلَتَكُونَنَّ مِنَ ٱلْخَٰسِرِينَ ﴿٦٥﴾ ﴿ الزمر: ٦٥﴾

நபியே! நீர் இணைவைத்தாலும் நிச்சமாக உமது அமல்களும் அழிந்துவிடும் என்றும் நீர் நஷ்டவாளர்களில் ஒருவராகிவிடுவீர் என்று உமக்கும் உமக்கு முன்னர் வந்தவர்களுக்கும் நிச்சமாக வஹி அறிவிக்கப்பட்டு விட்டது. (அஸ்ஸுமர்: 65)

وَلَوْ أَشْرَكُوا۟ لَحَبِطَ عَنْهُم مَّا كَانُوا۟ يَعْمَلُونَ ﴿٨٨﴾ ﴿ الأنعام: ٨٨ ﴾

(நபிமார்களான) அவர்கள் இணைவைத்தாலும் அவர்கள் செய்து கொண்டிருந்தவைகள் (அமல்கள்) அவர்களை விட்டும் அழிந்து விடும் (அல்-அன்ஆம்: 88)

நபிமார்களுக்கே இந்த எச்சரிக்கை எனில் நமது நிலை?

وَقَدِمْنَآ إِلَىٰ مَا عَمِلُوا۟ مِنْ عَمَلٍ فَجَعَلْنَٰهُ هَبَآءً مَّنثُورًا ﴿٢٣﴾ ﴿الفرقان: ٢٣﴾

(இணைவைப்பாளர்களான) அவர்கள் செய்த அமல்களின் பக்கம் நாம் வந்தோம். (இக்லாஸ் இன்மை, இணைவைத்தல் காரணமாக) அதனை நாம் பரத்தப்பட்ட பகல் காலப் புழுதி போன்று ஆக்கினோம். (அல்புர்கான்: 23)

عَنْ عَائِشَةَ قَالَتْ قُلْتُ يَا رَسُولَ اللهِ ابْنُ جُدْعَانَ كَانَ فِى الْجَاهِلِيَّةِ يَصِلُ الرَّحِمَ وَيُطْعِمُ الْمِسْكِينَ فَهَلْ ذَاكَ نَافِعُهُ قَالَ لاَ يَنْفَعُهُ إِنَّهُ لَمْ يَقُلْ يَوْمًا رَبِّ اغْفِرْ لِى خَطِيئَتِى يَوْمَ الدِّينِ (صحيح مسلم : ٥٤٠)

அன்னை ஆயிஷா رَضِيَ ٱللَّهُ عَنْهَا அவர்கள் குறிப்பிடு-கின்றார்கள். நான் நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே! ***இப்னு ஜத்ஆன்*** என்பவர் ஜாஹிலிய்யாக் கலாத்தில் இரத்த உறவைச் சேர்ந்து வாழ்பவராகவும், ஏழை எளிய மக்களுக்கு உணவளிப்பவராகவும் இருந்தாரே? அது அவருக்கு ஏதாவது பயன் தருமா? எனக் கேட்டேன். அதற்கு அவர்கள் இல்லை. அவருக்கு எந்தப் பயனும் தராது. ஏனெனில் அவர், ஒரு நாளில் கூட எனது இரட்சகனே! எனது தவறுகளை மன்னித்து விடு என்று கூறவில்லை எனக் கூறினார்கள். *(முஸ்லிம் 540)*

இந்தச் ஆதாரங்களையும், நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களைக் காணாத உர்வா அவர்கள் அறிவிக்கின்ற துவைபாவின் கனவுச் செய்தியையும் நிறுத்தால் உர்வா அவர்களின் இந்தச் செய்தி தரம் குன்றியதாகவும் ஆதாரத்திற்கு கொள்ள முடியாததாகவும் மாறி விடும்

*குறிப்பு:* நபிமார்கள் கண்ட கனவு அல்லது அவர்களின் காலத்தில் அவர்களின் அங்கீகாரம், ஒப்புதல் பெற்ற கனவுகள் நீங்கலாக கனவுகள் மூலம் இஸ்லாமிய சட்டத்தை நிறுவவோ, உறுதி செய்யவோ முடியாது என்பது இஸ்லாமிய அறிஞர்களின் ஏகோபித்த முடிவாகும்.

# மௌலித் பற்றிய இஸ்லாமியப் பார்வை

## அரபுப் பாடல்கள் வணக்கமாகுமா ?

மௌலித் ஓர் அரபுப்பாடலாகும். அதனை வணக்கமாகக் கருதிப் பாடுவதற்கு முன்னர் அரபுப்பாடல்கள் பற்றிய இஸ்லாத்தின் நிலைப்பாடு பற்றியும், முஹம்மத் நபி ﷺ அவர்கள் பாடல்கள், கவிதைகள் தொடர்பாக எவ்வாறான நிலைப்பாட்டில் இருந்தார்கள்? பாடல்களை களைப்பைப் போக்கும், மகிழ்வை வரவழைக்கும் சாதாரண பாடல்களில் வரிசையில் கணித்தார்களா? அல்லது குர்ஆன், திக்ர், துஆக்கள் போன்று வணக்கமாகக் கணித்தார்களா? போன்ற அடிப்படைகளை ஒரு முஸ்லிம் அறிந்து கொள்வதால் "மௌலித்" எந்த தரத்தில் மதிக்கப்படல் வேண்டும் என்பதை அவனால் உறுதி செய்து கொள்ள முடியும். அது பற்றி இங்கு நோக்குவோம்.

அல்-குர்ஆனில் இடம் பெறும் அத்தியாயங்கள் வெவ்வேறான பெயர்களில் இடம் பெற்றுள்ளது போன்று "கவிஞர்கள்" என்ற பெயரிலும் ஒரு அத்தியாயம் உண்டு. அது அல்குர்ஆனில் 26 வது அத்தியாயமாக இடம் பெறுகின்றது.

அது பல விடயங்கள் பற்றிப் பேசுவது போன்று தீய கவிஞர்களின் நிலை பற்றியும் பேசுகின்றது. அதனால் அதற்கு "கவிஞர்கள்" என்ற பெயர் வைக்கப்பட்டுள்ளது. கவிஞர்கள் என்போர் எவ்வாறான பண்புள்ளவர்கள்

என்று அந்த அத்தியாயத்தில் சுருக்கமாக விளக்கப்-பட்டுள்ளது.

وَٱلشُّعَرَآءُ يَتَّبِعُهُمُ ٱلْغَاوُۥنَ ﴿٢٢٤﴾ أَلَمْ تَرَ أَنَّهُمْ فِى كُلِّ وَادٍ يَهِيمُونَ ﴿٢٢٥﴾
وَأَنَّهُمْ يَقُولُونَ مَا لَا يَفْعَلُونَ ﴿٢٢٦﴾ ﴿الشعراء: ٢٢٤ - ٢٢٦﴾

கவிஞர்களை வீணர்களே பின்பற்றுவார்கள். அவர்கள் ஒவ்வோரு பள்ளத்தாக்கிலும் தட்டழிந்து திரிவதை (நபியே!) நீர் பார்க்கவில்லயையா? மேலும், அவர்கள் செய்யாததையே சொல்வார்கள். *(அஷ்ஷுரா: 224 - 226)*

முஹம்மத் நபி ﷺ அவர்களுக்கு அல்லாஹ் குர்ஆன், மற்றும் சுன்னா என்ற வஹியின் ஊடாக கற்றுக் கொடுத்த பண்புகளில் கவிதை முறை இடம்பெறவில்லை என்பதாக அல்குர்ஆன் முடிவாகக் கூறுகின்றது.

وَمَا عَلَّمْنَٰهُ ٱلشِّعْرَ وَمَا يَنۢبَغِى لَهُۥٓ..... ﴿٦٩﴾ ﴿يس: ٦٩﴾

நாம் அவருக்கு கவிதையை கற்றுக் கொடுக்க-வுமில்லை, அது அவருக்கு அவசியமும் அன்று.
*(யாசீன்: 69)*

நபி ﷺ அவர்களின் போதனைகள் கவிஞர்களின் கவிக்காவியங்களாக இருக்கவில்லை என்பதை அக்காலத்தில் வாழ்ந்த புலமை பெற்ற அரபுக் கவிஞர்கள் பலர் உறுதி செய்துள்ளனர்.

அஸத் ஷனூஆக் கோத்திரத்தில் "ளமாத்" என்ற ஜாஹிலிய்யக்கால வைத்தியர் ஒருவர் இருந்தார். மக்காவில் நபி ﷺ அவர்களின் இஸ்லாமியப் போதனைகளை செவிமடுத்த குரைஷியக் காபிர்கள் முஹம்மத் நபி ﷺ அவர்களுக்கு பைத்தியம் பிடித்துவிட்டது என்று கதை பரப்பினர்.

அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் ﷺ அவர்களுக்கு பைத்தியத்திற்கான மருத்துவம் செய்து குணப்படுத்த வெகு தூரத்தில் இருந்து மக்கா வந்தடைந்த அவர் முஹம்மத் ﷺ அவர்களைச் சந்தித்து நேரடியாக உரையாடிக் கொண்டிருந்த போது முஹம்மத் நீங்கள் போதிக்கும் மார்க்க போதனைகளை என்னிடம் கொஞ்சம் சொல்லிக் காட்டுங்கள் எனக் கேட்டுக் கொண்டார்.

நபி ﷺ அவர்கள் பொதுவாக உரைகளின் போது தொடங்கும் ..... إِنَّ الْحَمْدَ لِلَّهِ نَحْمَدُهُ وَنَسْتَعِينُهُ என்ற வாசகங்களை ஓதிக் காண்பித்தார்கள். இதன் உள்ள ஆழமான பொருள்களால் மனதனால் கவரப்பட்ட இவர் நிலை குலைந்து போனார். பின்னர் அவர்,

... فَقَالَ لَقَدْ سَمِعْتُ قَوْلَ الْكَهَنَةِ وَقَوْلَ السَّحَرَةِ وَقَوْلَ الشُّعَرَاءِ فَمَا سَمِعْتُ مِثْلَ كَلِمَاتِكَ هَؤُلاَءِ وَلَقَدْ بَلَغْنَ نَاعُوسَ الْبَحْرِ – قَالَ – فَقَالَ هَاتِ يَدَكَ أُبَايِعْكَ عَلَى الإِسْلاَمِ – قَالَ – فَبَايَعَهُ. (صحيح مسلم : ٢٠٤٥)

நிச்சயமாக நான் ஜோதிடர்களின் வார்த்தைகளைச் செவிமடுத்துள்ளேன். சூனியக் காரர்களின் வார்த்தை-களையும் செவிமடுத்துள்ளேன். கவிஞர்களின்

வார்த்தைகளையும் செவிமடுத்துள்ளேன். இந்த வார்த்தைகள் போன்றதை நான் செவிமடுத்ததே இல்லை எனக் கூறி விட்டு, நிச்சயமாக இவைகள் (தாட்பரியத்தால்) ஆழ் கடலின் ஆழியை எட்டி விட்டன எனக் கூறி விட்டு **முஹம்மதே!** இஸ்லாத்திற்காக உங்களிடம் உறுதி மொழி தருவதற்காக உங்கள் கரத்தை தாருங்கள் என நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களின் கரம் பிடித்து, உறுதி மொழி வழங்கி இஸ்லாத்தில் இணைந்தார் என்ற வரலாற்றை இமாம் முஸ்லிமின் கிரந்தத்தில் பார்க்கின்றோம்.

இந்த சம்பவமும் இது போன்ற இன்னும் பல சம்பவங்களும் அல்லாஹ் அவனது உயரிய மார்க்கத்தைப் பரப்ப முஹம்மத் நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களுக்கு கவிதைகளைக் கற்றுக் கொடுக்கவில்லை என்பதை அறிவுறுத்துகின்றன.

எனவே மவ்லித், புர்தா போன்ற ஷிர்கான பாடல்களால் இஸ்லாத்தை சீரழிக்கலாமே தவிர சீரமைக்க முடியாது என்பதையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

## கவிதைகள் தொடர்பான நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களின் நிலைப்பாடு

மவ்லித் பாடல்கள் பள்ளிகளில் ஒரு வணக்கமாகப் பாடப்பட்டுவருவதாலும் அவற்றில் உள்ள பல வரிகளின் கருத்துக்கள் இஸ்லாமிய அடிப்படைகளுக்கு முரணான ஷிர்கான பல கருத்துக்களைக் கொண்டிருப்பதாலும் நபித்தோழர்களின் விரோதிகளான ஷீஆக்களால் அது

உருவாக்கப்பட்டிருப்பதாலும் மவ்லித் என்பது நபிவழி நடக்கும் சுன்னத் ஜாமத் கொள்கை நடப்போரின் வழி அல்ல என்பதை நாம் புரிந்து கொண்டு அரபுப் பாடல்கள், கவிதைகள் தொடர்பாக நபி ﷺ அவர்கள் எவ்வாறான நிலைப்பாட்டில் இருந்தார்கள் என்பது பற்றி தெளிவாக அறிந்து கொள்ள கடமைப்பட்டுள்ளோம்.

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ قَالَ بَيْنَا نَحْنُ نَسِيرُ مَعَ رَسُولِ اللهِ ﷺ بِالْعَرْجِ إِذْ عَرَضَ شَاعِرٌ يُنْشِدُ فَقَالَ ﷺ خُذُوا الشَّيْطَانَ أَوْ أَمْسِكُوا الشَّيْطَانَ لَأَنْ يَمْتَلِئَ جَوْفُ رَجُلٍ قَيْحًا خَيْرٌ لَهُ مِنْ أَنْ يَمْتَلِئَ شِعْرًا (مسلم: ٢٢٦٧)

நபிகள் நாயகம் ﷺ அவர்களுடன் ஒரு பயணத்தில் “அர்ஜ்” என்ற இடத்தில் நாம் இருந்து கொண்டிருந்த போது ஒரு கவிஞர் கவிபாட ஆரம்பித்தார். அப்போது நபிகள் நாயகம் ﷺ அவர்கள் அந்த ஷைய்தானை பிடித்து நிறுத்துங்கள் எனக் கூறி விட்டு உங்களில் ஒருவரின் வயிறு கவியால் நிரம்பி இருப்பதை விட சீழால் நிரம்பிக் காணப்படுவது மேலானது எனக் கூறினார்கள். *(முஸ்லிம்)*

இதன் மூலம் கவிதைக்கும் இஸ்லாமிய வணக்க முறைகளுக்கும் இடையில் காணப்படும் உறவைப்-புரிந்து கொள்ளலாம்.

இருப்பினும் இஸ்லாமிய அடிப்படைகளுக்கு முரண் இல்லாத கவிதைகள் பாடுவதை, இயற்றுவதை நபி

ﷺ அவர்கள் தடை செய்யவில்லை என்பதை பின்வரும் நிகழ்வுகள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

عَنِ الرُّبَيِّعِ بِنْتِ مُعَوِّذٍ قَالَتْ دَخَلَ عَلَيَّ النَّبِيُّ ﷺ غَدَاةَ بُنِيَ عَلَيَّ فَجَلَسَ عَلَى فِرَاشِي كَمَجْلِسِكَ مِنِّي وَجُوَيْرِيَاتٌ يَضْرِبْنَ بِالدُّفِّ يَنْدُبْنَ مَنْ قُتِلَ مِنْ آبَائِهِنَّ يَوْمَ بَدْرٍ حَتَّى قَالَتْ جَارِيَةٌ وَفِينَا نَبِيٌّ يَعْلَمُ مَا فِي غَدٍ فَقَالَ النَّبِيُّ ﷺ : لاَ تَقُولِي هَكَذَا وَقُولِي مَا كُنْتِ تَقُولِينَ. (صحيح البخاري )

ருபையி.்். பின்த் முஅவ்வித் رَضِيَ ٱللَّٰهُ عَنْهَا அவர்கள் அவர்களுக்கு திருமணமாகி அவர்கள் தமது கணவரோடு இல்லற வாழ்வைத் தொடங்கிய காலைப் பொழுதில் அவர்களின் இல்லம் நோக்கி நபி ﷺ அவர்கள் சென்றார்கள். அப்போது சிறுமிகள் சிலர் பத்ர் போரில் வீரமரணம் அடைந்த தமது மூதாதையர்களான நபித்தோழர்களைப் பற்றிப் மேளம் அடித்து, இரங்கல் பாடல் பாடிக் கொண்டிருந்தனர். அந்தச் சிறுமிகள் நபி ﷺ அவர்களைக் கண்டதும் அவர்களில் ஒரு சிறுமி

وَفِينَا نَبِيٌّ يَعْلَمُ مَا فِي غَدٍ فَقَالَ النَّبِيُّ ﷺ: لاَ تَقُولِي هَكَذَا وَقُولِي مَا كُنْتِ تَقُولِينَ. (صحيح البخاري)

“எங்களிலே ஒரு நபி இருக்கின்றார். அவர் நாளை நடப்பதையும் அறிவார்” எனப் பாடினார். உடனே நபி ﷺ அவர்கள் *“நீ ஆரம்பமாகப் பாடிய வரிகளைப்பாடு, இதைப்பாடாதே”* என நெறிப்படுத்தியதாக ருபையி.்். رَضِيَ ٱللَّٰهُ عَنْهَا என்ற ஸஹாபியப் பெண்மணி அவர்கள் அறிவிக்கின்றார்கள். *(புகாரி)*

கவிதைகளால் இறை நினைவு இழக்கப்பட்டு, பாழ்படுத்தப்படுமாக இருந்தால் அதனை நபி ﷺ கடுமையாக வெறுத்துள்ளார்கள். அதனால்தான் ஒருவரின் நெஞ்சத்தில் கவிதை நிரம்பி இருப்பதைவிட சீழ் நிரம்பி இருப்பது மேல் எனக் கூறியுள்ளார்கள்.

அதேவேளை, நபித்தோழர்கள், மற்றும் மாற்றுமத கவஞர்களின் கவிதை வரிகளைக் கொண்டு சில போது உதாரணம் கூறும் வழக்கம் நபி ﷺ அவர்களிடம் இருந்துள்ளதை ஹதீஸ்களில் அவதானிக்க முடிகின்றது.

ஸலமா பின் அல்அக்வ.ீ. رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்கள் அறிவிக்கின்றார்கள். நாம் நபி ﷺ அவர்களோடு போருக்காக கைபர் நோக்கி ஒரு இரவில் புறப்பட்டுச் சென்றோம். அப்போது கூட்டத்தில் இருந்த ஒரு மனிதர் ஆமிர் رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்களை நெருங்கி, ஆமிர் உமது கவிதைகளில் இருந்து சிலதை எமக்கு செவியுறச் செய்யமாட்டீர்களா? எனக் கேட்டார். ஆமிர் رَضِيَ اللَّهُ عَنْهُ (சிறந்த) கவிஞராக இருந்தார்கள். உடனே அவர்கள் தமது ஒட்டகத்தில் இருந்து இறங்கி பின்வரும் (யாப்பு வரிக் கவிதைகள்) பாடி மக்களை உற்சாக மூட்டினார்கள்.

اَللّٰهُمَّ لَوْلاَ أَنْتَ مَا اهْتَدَيْنَا ، وَلاَ تَصَدَّقْنَا ، وَلاَ صَلَّيْنَا ، فَاغْفِرْ فِدَاءً لَكَ مَا أَبْقَيْنَا وَثَبِّتِ الأَقْدَامَ إِنْ لاَقَيْنَا ، وَأَلْقِيَنْ سَكِينَةً عَلَيْنَا إِنَّا إِذَا صِيحَ بِنَا أَبَيْنَا ، وَبِالصِّيَاحِ عَوَّلُوا عَلَيْنَا. (صحيح البخاري : ٦١٤٨)

பொருள்: அல்லாஹ்வே! நீ இல்லை என்றால் நாம் நேர்வழி பெற்றிருக்க மாட்டோம். தர்மம் செய்திருக்கவு-மாட்டோம், தொழுதிருக்கவுமாட்டோம், எனவே எமக்கு

மன்னிப்புத் தருவாயாக! உனக்காக எம்மை நாம் அற்பணம் செய்கின்றோம். நாம் எதிரிகளை நேருக்கு நேர் சந்திக்க நேர்ந்தால் எமது பாதங்களை உறுதிப்படுத்திடுவாயாக! எங்கள் மீது அமைதியைப் பொழிந்திடுவாயாக! (அறவழியில் போரிட) அழைக்-கப்பட்டால் நாம் வந்திடுவோம். அபயக் குரல் எம்மை நோக்கி எழுப்பப்பட்டால் நாம் அதற்கு பதில் அளிப்போம் எனக் கவி பாடினார்கள் *(புகாரி 6148)*

லுபைத் என்ற கவிஞனின் பாடல் வரிகள் பற்றி விமர்சனம் செய்த அல்லாஹ்வின் தூதர் அவர்கள்

عَنْ أَبِي هُرَيْرَةَ رَضِيَٱللَّهُعَنْهُ قَالَ : قَالَ النَّبِيُّ صَلَّىٱللَّهُعَلَيْهِوَسَلَّمَ أَصْدَقُ كَلِمَةٍ قَالَهَا الشَّاعِرُ كَلِمَةُ لَبِيدٍ أَلاَ كُلُّ شَيْءٍ مَا خَلاَ اللّٰهَ بَاطِلٌ. (صحيح البخاري: ٣٨٤١)

வார்த்தைகளில் மிகவும் உண்மையான, வாய்மை-நிறைந்த வார்த்தைகள் அடங்கியது "கவனத்தில் கொள்ளுங்கள்! அல்லாஹ்வை அன்றி மற்றவை எல்லாம் அழிவைத் தழுவும்" என்று கவிஞன் லுபைத் உரைத்த வார்த்தையாகும் எனக்கூறியதாக நபித்தோழர் அபூ ஹுரைரா رَضِيَٱللَّهُعَنْهُ அவர்கள் அறிவிக்கின்றார்கள். *(புகாரி 3841)*

நபித்தோழர் அப்துல்லாஹ் பின் ரவாஹா رَضِيَٱللَّهُعَنْهُ அவர்கள் சிறந்த கவிஞராக இருந்தார்கள். அவர் நபி صَلَّىٱللَّهُعَلَيْهِوَسَلَّمَ அவர்களின் கவிஞர்களில் ஒருவர். அவரது பாடல் வரிகள் பல ஹதீஸ் கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

நபி ﷺ அவர்கள் ஹஸ்ஸான் رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களின் பாடல்களுக்கு செவிமடுப்பது போன்று இவரின் பாடல் வரிகளையும் நபி ﷺ அவர்கள் விரும்பி செவிமடுப்பார்கள்.

ஒரு நாள் நபி ﷺ அவர்கள் உங்களின் சகோதரர் இப்னு ரவாஹா அவர்கள் ஒரு போதும் முறைதவறிய, அநாகரீகமான, முறையற்ற வார்த்தைகளால் கவிதை பாடமாட்டார் எனக் கூறி விட்டு பின்வரும் அவரது கவிதை வரிகைளை கோடிட்டுக் காட்டினார்கள்.

وَفِينَا رَسُولُ اللهِ يَتْلُو كِتَابَهُ * إِذَا انْشَقَّ مَعْرُوفٌ مِنَ الْفَجْرِ سَاطِعُ.

أَرَانَا الْهُدَى بَعْدَ الْعَمَى فَقُلُوبُنَا * بِهِ مُوقِنَاتٌ أَنَّ مَا قَالَ وَاقِعُ.

يَبِيتُ يُجَافِي جَنْبَهُ عَنْ فِرَاشِهِ * إِذَا اسْتَثْقَلَتْ بِالْمُشْرِكِينَ الْمَضَاجِعُ.

எங்களில் ஒரு தூதர் இருக்கின்றார்கள், அவர்கள் வைகரைப் பொழுது புலரும் வேளை அல்லாஹ்வின் வேதத்தை ஓதுவார்கள். குருட்டத்தனத்தின் பின் எங்களுக்கு அவர்கள் நேர்வழி காண்பித்தார்கள். அவர்கள் சொல்லக் கூடியது நிச்சயம் நடக்கும் என்பதை நமது இதயங்கள் உறுதியாக நம்புகின்றன. இணைவைப்பாளர்கள் படுக்கைகளில் புரண்டு கிடக்கும் தருணத்தில் இவர்களோ தமது படுக்கையில் இருந்து எழுந்து நின்று அல்லாஹ்வை வணங்குவார்கள்.

*(புகாரி: 6151)*

இந்த நபித்தோழர் மக்கா சென்றிருந்த போது அங்கு பாடல்கள் பாடியதை அவதானித்த உமர் رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்கள் அதை விரும்பாதவர்கள் போன்று உரையாடினார்கள். அது தொடர்பான பின்வரும் சம்பவத்தைப் படியுங்கள்

خلوا بني الكفار عن سبيله اليوم نضربكم على تنزيله- ضربا يزيل الهام عن مقيله ويذهل الخليل عن خليله قال له عمر يا ابن رواحة بين يدي رسول الله صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وفي حرم الله تقول الشعر فقال له النبي صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ خل عنه يا عمر فلهي أسرع فيهم من نضح النبل.

(سنن الترمذي – شاكر + ألباني)

காபிர்கள் தமது வழியில் வர விட்டு விடுங்கள், (அவர்கள் உடன்படிக்கையை மீறின்) இன்றைய தினம் அவர்களின் முன் நெற்றியை அதன் உரிய இடத்தை விட்டும் போக்கிடும் அளவும், உற்ற நண்பன் தனது சக நண்பனை பிரிந்து பரிதவிக்கும் நிலை வரும்வரையும் அல்குர்ஆனின் ஆதாரத்தை முன்னிறுத்தி அவர்களுக்-கெதிராகப் போராடுவோம் என அப்துல்லாஹ் பின் ரவாஹா رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்கள் கவிதை பாடியதை அவதானித்த உமர் رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்கள் ரவாஹாவின் மகனே! அல்லாஹ்வின் தூதர் முன்னிலையில், அதுவும் ஹரம் பள்ளி வளாகத்தினுள் கவிதை பாடுகின்றீர்களே (இது நல்லதா?) எனக் கேட்ட போது நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் உமர் رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களிடம் உமர்! அவரது

வார்த்தைகள் காபிர்களுக்கு கூரிய அம்பைவிடவும் விரைவானது எனக் கூறினார்கள். (திர்மிதி).

அன்னை ஆயிஷா رَضِيَ ٱللَّهُ عَنْهَا அவர்களின் பின்வரும் அறிவிப்பில் இன்னும் சில தகவல்கள் காணப்படுகின்றன.

நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் கவிதைகளைக் கொண்டு உதாரணம் கூறுபவர்களாக இருந்தார்களா? என அன்னை ஆயிஷா رَضِيَ ٱللَّهُ عَنْهَا அவர்களிடம் கேட்கப்பட்ட போது அவர்களுக்கு மிகவும் வெறுப்பானது கவிதைதான் எனக் கூறி விட்டு சில போது இப்னு தரி.ஃ.பா என்ற கவிஞரின் வரிகளைக் கூறிக் காட்டுவார்கள் எனக் குறிப்பிட்டார்கள். (*அஹ்மத், நஸயி*).

திர்மிதியில் இடம் பெறும் அறிவிப்பில்:

عن عائشة قال : قيل لها هل كان النبي صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يتمثل بشيء من الشعر ؟ قالت كان يتمثل بشعر ابن رواحة ويتمثل ويقول ويأتيك بالأخبار من لم تزود (سنن الترمذي – شاكر + ألباني)

நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் கவிதைகளை உதாரணமாகக் கூறுவார்களா? எனக் கேட்கப்பட்ட போது அவர்கள் இப்னு ரவாஹாவின் கவிதைகளை உதாரணமாகப் கூறுவார்கள் எனக் கூறியதாக இடம் பெற்றுள்ளது.

சில நேரங்களில் அப்துல்லாஹ் பின் ரவாஹா رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களின் கவிதை வரிகளை உதாரணமாகக்

கூறுபவர்களாக இருந்தார்கள் என்று திர்மிதியில் மற்றொரு அறிவிப்பு இடம் பெற்றுள்ளது.

கவிதையை நபி ﷺ அவர்களுக்கு கற்றுக் கொடுக்கவில்லை என்றிருக்கின்ற போது நபி ﷺ அவர்கள் சில கட்டங்களில் கவிதை அடிகள் போன்று சில வரிகள் கூறியுள்ளார்கள். அதன் விளக்கம் என்ன? என்ற கேள்வி இங்கு பிறக்கின்றது.

***பதில்:*** அது அவர்கள் விரும்பி இயற்றிக் கூறுவதில்லை. மட்டுமின்றி, அது அடுக்கு மொழி போன்ற ஒன்று என இமாம்கள் குறிப்பிடுகின்றனர். அது தொடர்பாக பின்வரும் செய்திகளில் கவனிக்க முடியும்.

நபி ﷺ அவர்கள் மக்கா வெற்றி முடிந்து ஹுனைன் போரில் கலந்து கொள்ளச் சென்றார்கள். தமது வெள்ளை நிரக் கோவேறு கழுதை மீது அதன் கடிவாளத்தைப் பிடித்தவர்களாக

أَنَا النَّبِيُّ لاَ كَذِبْ أَنَا ابْنُ عَبْدِ الْمُطَّلِبْ. (صحيح البخاري: ٢٨٧٤)

நான் நபிதான் என்பது பொய்யல்ல, நான் அப்துல் முத்தலிபின் மகனும் ஆவேன் எனக் கூறினார்கள்.
*(புாகரி 2784)*

عَنْ جُنْدُبِ بْنِ سُفْيَانَ أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ فِي بَعْضِ الْمَشَاهِدِ وَقَدْ دَمِيَتْ إِصْبَعُهُ فَقَالَ : هَلْ أَنْتِ إِلاَّ إِصْبَعٌ دَمِيتِ وَفِي سَبِيلِ اللهِ مَا لَقِيتِ.

(صحيح البخاري :٢٨٠٢)

நபி ﷺ அவர்கள் போர்க்களம் ஒன்றில் பங்கு பற்றி இருந்த போது அவர்களில் விரல்கள் காயப்பட்டு இரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது. அப்போது நீ அல்லாஹ்வின் பாதையில் இரத்தம் சொட்டிய விரல்தானே. நீ அல்லாஹ்வின் பாதையில்தானே எதிர் கொண்டாய் என (ஈரடிச் சீர் வகை பாடல் போன்ற வரிகளைக்) கூறினார்கள். *(புகாரி)*

இந்தச் செய்திகளை நன்றாக சிந்தித்தால் திருமண வீடுகளில், போர்க் களங்களில், பொது வைபவங்களில் கவிதை பாட அனுமதிக்கப்பட்டிருப்பதை அவதானிக்க முடியும். இவை நபி ﷺ அவர்கள் பாடியவைகளா என்றால் இல்லை. அனுமதித்தவைகள் என்பதே உண்மை.

அந்த அடிப்படையில்,

- சிறுவர்களை வைத்து பாடல்கள் பாடுவது,
- நபி புகழ் பாடுவது,
- நபித்தோழர்களைப் புகழ்ந்து பாடுவது,
- நாதாக்கள், நல்லடியார்கள் என்போர் பற்றி பாடல்களாக, கவிதைகளாகக் கூற மார்க்கத்தில் அனுமதிப்பட்டாலும் அவர்களை கடவுள் நிலையில் வைத்துப் புகழ்பாடவோ வணக்கமாக எடுத்து செயற்படவோ முடியாது என்பது மார்க்கத்தின் நிலைப்பாடாகும்.

அவ்வாறு பாட அனுமதிக்கபட்டுள்ள இந்த அங்கீகாரத்தை தொழுகை போன்ற வணக்கத்தில் சேர்ப்பதா? அல்லது சமூக வழக்கிலும், ஷரீஆவின் அனுமதியினுல் சேர்ப்பதா? என்று சிந்திக்க வேண்டும்.

தற்போது நடைமுறையில் உள்ள மௌலித் மற்றும் புர்தாப் பாடல்கள் முஸ்லிம்களிடம் குறிப்பாக மௌலித் ஆதரவாளர்கள் மத்தியில் வணக்கமாகக் காணப்பட்டது போன்று நபித்துவ காலத்தில் மஸ்ஜித் நபவி போன்ற பள்ளிகளில் பாடப்படும் வணக்க முறைகளில் ஒன்றாக இருந்ததில்லை.

மாற்றமாக, அவர்களின் கவிதை முறை இன்றைய கால அமைப்பில் இருந்து முற்றிலும் வேறுபட்டதாக இருந்துள்ளதை மேலே உள்ள நிகழ்வுகள் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

நபித்தோழர்களின் காலத்தில் கவிதைகள் என்பன வணக்கமின்றி, ஒரு மகிழ்ச்சிக்கான, அல்லது இரங்கலுக்கான, அல்லது சோர்வைப் போக்குவதற்கான உற்சாகமூட்டும் ஒரு நிகழ்வாக இருந்துள்ளதை மேலுள்ள நிகழ்வுகளில் இருந்து அவதானிக்க முடிகின்றது.

நபித்தோழர்கள் பயணத்தில், போர்களத்தில், திருமண வீடுகளில், சடைவைப் போக்க பாடல்கள் பாடினார்கள் என்பதற்காக அதை சுன்னத் என வாதிடுவதா? அல்லது கடற்கரையில் வலை இழுக்கும் மீனவர்கள் போன்று தொய்வைக் கலைக்க, சோர்வைப் போக்க, உற்சாகத்தை வரவழைக்க பாடல்கள் பாடியது போன்று

பாடினார்கள் என்று பொருள் கொள்வதா? அப்படித்தான் இஸ்லாமிய சட்டத்தை அகழ்ந்தெடுப்பதா? என்று சிந்திக்க வேண்டும்.

## மீலாத் தினத்தின் ரகசியம் என்ன?
### ஐயமும் தெளிவும்

*ஐயம்:* ஹஸ்ஸான் பின் ஸாபித் رَضِيَ ٱللَّٰهُ عَنْهُ அவர்களிடம் இணைவப்பாளர்களை எதிர்த்துக் கவிபாட நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் அனுமதித்தது மவ்லித் பாடலுக்கான அங்கீகாரம்தானே!

*தெளிவு:* கவிதைகள் தொடர்பான நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களின் நிலைப்பாட்டை நீங்கள் தெளிவாக வாசித்திருப்பீர்கள். அதில் இது போன்ற சந்தேகங்-களுக்கான தெளிவான பதில்கள் தரப்பட்டுள்ளன.

ஹஸ்ஸான் رَضِيَ ٱللَّٰهُ عَنْهُ அவர்கள் நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களுக்காக குரைஷியரை எதிர்த்து வசைக்கவி பாடினார்கள் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. அது தொடர்பான செய்தி புகாரி, முஸ்லிம் உள்ளிட்ட ஹதீஸ் கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. அது மவ்லித் பாடல்களுக்கு எப்போதும் ஆதாரமாகப் போவதில்லை. ஏனெனில் அவைகள் நபி صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் தமது காதால் செவிமடுத்த, இணைவைத்தல் இல்லாத பாடல்களாகும்.

மக்காவாழ் காபிர்கள் நபிகள் நாயகம் صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களை கவிதைகளால் வசைபாடி நிந்திப்போராக இருந்தனர். அவர்களுக்கு கவிதையால் பதில் அளிக்க

முடியாத நபி ﷺ அவர்கள் அப்துல்லாஹ் பின் ரவாஹா, கஃப் பின் மாலிக் رَضِيَ اللَّهُ عَنْهُ போன்ற கவிஞர்களிடம் பதில்கவி பாடுமாறு கூறினார்கள். அவர்களின் கவிதைகள் தமக்குத் திருப்தி அளிக்காததால் கவிச் சிங்கம் என்ற பெயருக்குச் சொந்தக்காரரும் கவித்துறையில் சிறப்புத்தேற்சி பெற்றவருமான ஹஸ்ஸான் رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்களை அழைத்து கவிதையிலேயே அவர்களுக்கு பதிலடி கொடுக்கும் படி பணித்தார்கள்.

“குழைத்த மாவில் இருந்து முடியைக் கழைவது போன்று நான் அவர்களைக் கழையெடுப்பேன்” எனக் கர்ஜித்த வீரச்சிங்கம் ஹஸ்ஸான் رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்கள் அல்லாஹ்வின் தூதரின் உயர் குலம், உயர்ந்த பண்பாடு, சிறப்பான நடைமுறைகளை எடுத்துக்காட்டி நபி ﷺ அவர்களை உயர்த்தியும், மக்கா எதிரிகளைத் தாழ்த்தியும், இகழ்ந்தும் வசைக்கவி பாடினார்கள் என்பதுதான் ஹதீஸ்.

நபி ﷺ அவர்களை உலகப் பயங்கரவாதத்திற்கு வித்திட்டவர் என அமெரிக்கக் கழிசடை ஒன்று நவீன காலத்தில் காழ்ப்புணர்வுடன் சாடிப் பேசியதை நீங்கள் அறிவீர்கள்.

இந்த நிலையில் இவன் போன்ற ஷைய்தான்களை எதிர்த்தும் நமது நபி அவர்களின் பெருமையை உயர்த்தியும், இவன் போன்றவர்களின் கருத்துக்களை மறுத்தும் பாடல்கள், கவிதைகள் பாடுவதையும், கட்டுரைகள் வரைவதையுமே இந்த ஹதீஸ் விளக்கு-கின்றது.

அதற்காக நபி ﷺ அவர்களின் அங்கீகாரம் பெற்ற ஹஸ்ஸான் رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்களின் கவிதைகளை நாம் பிரதி வெள்ளிக்கிழமைகளில் "அல்கஹ்.ஃ.ப்" அத்தியாயத்தை ஓதி வருவது போன்றோ, அல்லது நபி ﷺ அவர்கள்மீது ஸலவாத் சொல்வது போன்றோ நபித்தோழர்கள் வருடாவருடம் ரபீஉல் அவ்வல் மாதத்தில் மஸ்ஜிதுன் நபவியிலோ அல்லது வேறு பள்ளிகளோ, மதீனா நகர் வீடுகளிலோ ஓதி வந்தார்களா? என்றால் அதற்கு ஆதாரம் காணமுடியாது.

அது ஒரு புறமிருக்க ஸஹாபாக்கள் வழி வந்த "சுன்னத் வல் ஜமாஅத்" அறிஞர்கள்தாம் இந்த மவ்லிதை உருவாக்கினார்களா? என்றால் இல்லை. அப்படியானால் அதை உருவாக்கியவர்கள் யார் ? ஏன் உருவாக்கினார்கள் என்ற கேள்விக்கு ஷீஆக்கள் என்பது பதிலாக சொல்லப்படுவதன் ரகசியம் என்ன? வாசியுங்கள்.

*யூதர்கள் தமது எதிரியொருவரின் மரணத்திற்காக கொண்டாட்டம் நடாத்துவது அவர்களின் சமய பழக்கங்களில் ஒன்றாகும். நபி ﷺ அவர்கள் ரபீவுல் அவ்வல் பிறை பன்னிரெண்டில் மரணமானார்கள்.*

*எனவே, வருடந்தோறும் இவர்கள் மீலாத் கொண்டாடுவது உண்மையில் அல்லாஹ்வின் தூதரை நேசிப்பதற்காகவா? இல்லை. அல்லாஹ்வின் தூதரைக் கொலை செய்தது தாம் என்ற மனநிறைவான மகிழ்ச்சியைப் பரைசாட்டவே கொண்டாடுகின்றனர்.*

ஏனெனில் கைபர் நகரில் ஆட்டிறைச்சியில் விஷம் கலந்து அல்லாஹ்வின் தூதரைக் கொலை செய்ய யூதர்கள் எடுத்த சதி முயற்சி தோல்வியில் அடைந்தாலும் அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அதன் வேதனையை மரண வேளையிலும் உணர்ந்தார்கள் அல்லவா? இதனால்தான் யூதர்கள் மீலாத் தினத்தை ரபீவுல் அவ்வலில் தோற்று-வித்தார்கள். அதனை அவர்களின் வாரிசுகளான ஷீஆக்கள் உரமூட்டி வளர்த்தார்கள். (الجامع في المولد -١ مجموعة من المؤلفين)

## சுப்ஹான மவ்லித் வரிகளில் காணப்படும் இணைவைப்பு சார் வார்த்தைப் பிரயோகங்கள்

சுப்ஹான மவ்லிதில் பெரும் பாவமான இணை-வைத்தலைக் கொண்ட சில பாடல் வரிகள் இங்கு தரப்படுகின்றன. அதன் பொருளை நின்று, நிதானமாக சிந்தியுங்கள்.

السلامُ عليكَ يا مُبْرِي السِّقَامِ

பிணிகளை போக்குபரே உங்கள் மீது ஸலாம் உண்டாகட்டுமாக!

وَلَوْ تَكُوْنُ سقيمًا – لديه برْءُ السقامِ

நீ நோயுற்றவராக இருப்பின், (நபியாகிய) அவரிடம் அனைத்து நோய்களுக்கும் நிவாரணி உண்டு

وَمَرِيضاً أنتَ عائدهُ – قَدْ أتاهُ اللّٰهُ بالفرجِ

நபியே நீங்கள் சந்திக்கும் எந்த நோயாளிக்கும் அல்லாஹ் (நிவாரணத்தின்) விடிவைக் கொண்டு வருவான்.

السلامُ عليْكَ يا ماحِيْ الذُّنوبِ – السَّلامُ عليكَ يَا جَالِيْ الْكُرُوْبِ

பாவங்களை அழிப்பவரே! உங்கள் மீது ஸலாம் உண்டாகட்டுமாக! கஷ்டங்களை நீக்குபவரே உங்கள் மீது ஸலாம் உண்டாகட்டுமாக!

أنْتَ غَفَّارُ الْخَطَاياَ – والذنوبِ الْموبقاتِ

(நபியே!) நீங்கள்தான் தவறுகளை மன்னிப்பவர், நீங்கள்தான் பெரும்பாவங்களையும் மன்னிப்பவர்.

أنْتَ سَتَّارُ الْمَسَاوِيْ – وُمقِـيْل العثرات

குறைகளை மறைப்பவரும், நீங்கள்தான்! இடர்களை போக்குபவரும் நீங்கள்தான்.

ياولي الحسنات – يا رفيع الدرجات

நன்மைகளின் காவலரே! அந்துஸ்துக்களை உயர்த்-துபவரே!

كَفِّرُوْا عَنِّيْ ذُنُوبِيْ – واعْفُ لِيْ عَنْ سَـيِّئاتِ

எனது பாவங்களை எனக்குப் பொறுத்திடுங்கள். (எனது) குற்றங்களை எனக்கு மன்னித்து விடுங்கள்.

يَامَنْ تَمادَى واجترمَ – تُبْ وَاعترِفْ وارْجُ الْكَرَمَ،

وَلُذْ بِمَنْ حَلَّ الْحَرَمَ – ونُورُهُ عمَّ البِـلادْ

1) அநீதி செய்து பாவக்கறைகளில் மூழ்கியவனே! தவ்பாச் செய்! (பாவத்தை) ஏற்றுக் கொள்! கொடையை ஆதரவு வைத்து,

2) இந்த ஹரத்தில் அடங்கப்பட்டவரிடம் (நபியிடம்) பாதுகாப்பும் தேடிக் கொள்! அவரது பிரகாசமோ தேசங்கள் அனைத்திலும் வியாபித்து விட்டது.

عَالِمُ سِرٍّ وأخفَى ، مُسْتجِيْبُ الدَّعَوَاتِ

அவர் (முஹம்மத் ﷺ அவர்கள்) இரகசியம், மறைந்திருக்கும் அனைத்தையும் அறிந்தவர். அழைப்புக் களுக்கு பதில் அளிப்பவர்

أنتَ حَقًّا غياثُ الخلقِ أجْمعِهمْ

(நபியே!) சத்தியமாக நீங்கள்தாம் படைப்பினங்கள் அனைவருக்கும் அபயக்கரம் நீட்டுபவர்.

بَسطتُ كفَّ فاقتِيْ والندمِ ، أرجو جزيل فضلكمْ والكرمِ ،

مُستشفعًا نزيل هذا الحرمِ ، فلاحظونِيْ بدوام المددِ ،

فانجُدوا المسكينَ قبل الغرَقِ ، وأطْفِئوا بالبَسط وهجَ الحُرَقِ ،

وأبردوا باللطف حرَّ الكبِدِ.

(நபியே!) எனது வறுமை, கைசேத்தின் கரத்தை (உங்களிடம்) விரித்து விட்டேன். உங்களின் நிரப்பமான அருளையும், கொடையையும் நான் ஆதரவு

வைக்கின்றேன். இந்த (மதீனா) ஹரத்தில் அடங்கப்பட்டுள்ளவரிடம் சிபாரிசு வேண்டியவனாக (வந்து விட்டேன்) எனவே என்னை தொடர் உதவியின் மூலம் கவனித்துக் கொள்ள (வேண்டுகின்றேன்). இந்த வறியோன் (வறுமையில்) மூழ்கிடும் முன்னர் (அவனைக்) காத்திடுங்கள் (நபியே!) உங்கள் தாராளத்தன்மையால் எரியும் (வறுமை) நெருப்பை அணைத்திடுங்கள். உங்கள் இரக்க குணத்தால் ஈரலின் சூட்டைக் குளிராக்கி விடுங்கள்.

أَقْسَمْتُ فِيْ نَصْرِيْ بِكُمْ عَلَيْكُمُ

எனக்கு நீங்கள் உதவிட உங்கள் மீதுள்ள கடமை என்று உங்கள் மீது சத்தியம் செய்து விட்டேன்.

ياسَيديْ يا شفِيعيْ خُذ بيديْ

எனது மாண்பு மிகு தலைவரே! எனது சிபாரிசு நாயகரே! எனது கரத்தைப் பற்றிக் கொள்ளுங்கள்.

فروِّحوا رُوْحيْ بِكشفِ الكَربِ

கஷ்டங்களை நீக்குவதன் மூலம் என் ஆன்மாவுக்கு நிம்மதிப் பெருமூச்சு அளியுங்கள்.

ضاقَتْ بِيْ الأسبابُ، فبحثتُ هذا البابَ، أقبِّل الأعتابَ ،

أبغيْ رضَا الأحبابِ والسادةِ والأخيارِ

வாழ்வியல் பயணங்கள் எனக்கு மன நெருக்கடியைத் தந்துவிட்டன. அதனால் (நபியின் அடக்கத்தல) இந்த வாசலைத் தேடி வந்துவிட்டேன். நேசத்திற்குரிவர்களான,

அதி சிறந்த தலைவர்களின் (அபூபக்கர், உமர் رَضِيَٱللَّهُعَنْهُمَا ஆகியோர்) பொருத்தம் வேண்டி படிக்கட்டுகளை எல்லாம் முத்தமிடுகின்றேன்.

يا سيد الساداتِ جئتكَ قاصداً ، أرجوْ حماكَ فَلاَ تُخَيِّبْ مَقْصِديْ ،

مَالِيْ سِوَى حُبِّيْ لَدَيْكَ وَسِيْلَةٌ

தலைவர்களுக்கெல்லாம் மாண்புமிகு தலைவர் அவர்களே! உங்களை நாடி வந்து விட்டேன். உங்கள் பாதுபாப்பை ஆதரவு வைக்கின்றேன். எனவே எனது நோக்கத்தை தவிடுபொடியாக்கி விடாதீர்கள். என் நேசத்தால் உங்களிடம் வஸீலாத் தேடி (நெருங்கிட) அதுவன்றி எனக்கு வேறு வழி இல்லை (நாயகமே).

يا سيِّديْ يا رسولَ اللهِ خُذْ بِيَديْ ، مَالِيْ سواكَ وَلاَ أَلْوِيْ إِلَى أَحدٍ

மதிப்புக்குரிய எனது தலைவரே! அல்லாஹ்வின் தூதரே! என் கரத்தைப் பற்றிடுங்கள். எனக்கு உங்களை அன்றி யாரும் இல்லை. நான் வேறு யாரிடமும் சர்ணாகெதி அடையவுமாட்டேன்.

إِنَّا نَسْتجِيْرُ بِهِ فِيْ دَفْعِ كُلِّ انتقامٍ

அனைத்து கெடுதிகளையும் நீக்கிட (முஹம்மத் நபியாகிய) அவர் பொருட்டால் பாதுகாப்பு வேண்டி நாம் பிரார்த்தனை செய்கின்றோம்.

إِنِّيْ إِذاَ مَسَّنِيْ ضَيْمٌ يُـــرَوِّعُـنِيْ – أَقُوْلُ يَا سَيِّدَ السَّادَاتِ يـَا سَنَدِيْ

எனக்குப் பீதியை ஏற்படுத்தும் துன்பம் ஏதும் நேர்ந்துவிட்டால், தலைவர்களுக்கெல்லாம் தலைவரே! எனது துணையாளரே என்று (கூவி) அழைப்பேன்.

كُنْ لِيْ شَفِيْعًا إِلى الرَّحْمنِ مِنْ زَلَلِيْ –
وَامْنُنْ عَلَيَّ بِمَا لاَ كَانَ فِيْ خَلَدِيْ

எனது சறுகுதல்களில் இருந்து காத்திட அர்ரஹ்மானிடம் எனக்காகப் பரிந்துரையாளராக இருங்கள். எனது எண்ண அலைகளில் இல்லாதவை-களுக்கும் எனக்கு பேருபகாரம் செய்யுங்கள் (நாயகமே!)

وَاسْتُرْ بِطَوْلِكَ تَقْصِيْرِيْ مَدَى الْأَمَدِ –
وَاعْطُفْ عَلَيَّ بِعَفْوِ مِنْكَ يَشْمَلَنِيْ

எனது கவனக் குறைவை உங்கள் தயவால் காலெமெல்லாம் மறைத்திடுங்கள். மேலும், என்னை முழுமையாக போர்த்திக் கொள்ளும் உங்கள் மன்னிப்பால் எனக்கு பரிவும் காட்டிடுங்கள்.

حُبُّكُم فِي قَلبنا محوٌ– من رنيينِ الذنبِ والحرَجِ

உங்களின் நேசம் எங்கள் இதயத்தில் இருக்கின்றது. – (அது) பாவக்கறைகள் மற்றும் சங்கடம் தரும் தவறுகளில் இருந்து அழித்திடும் ஆற்றல் உள்ளது.

إِنِّيْ عُبَيْدٌ ذليلٌ مِن عَثَرَتِيْ أَسْتَقِيْلُ – وما يخيب النزيل في حي راع الذمام

நிச்சயமாக நான் இழிவடைந்த ஒரு சிற்றடிமையாவேன்.- என் சறுகல்களில் இருந்து என்னை நீக்கிவிடக் கோருகின்றேன். பொறுப்புக்களைச் சுமக்கும் பூமான் நபியின் பாசறையில் இறங்கியவர் வீண் போகமாட்டார். (என்றும் நம்புகின்றேன்.)

صَلوَاتُ اللهِ عَلَى الْمَهْدِيِّ - مُغِيْثِ النَّاسِ مِنَ الْوَهْجِ

நேர்வழியில் நடத்தப்பட்டவரும், சுட்டெரிக்கும் உஷ்னத்தில் இருந்து மனிதக் காப்பாளருமான மாநபியின் மீது அல்லாஹ்வின் நல்லாசி உண்டாகட்டுமாக!

மேலுள்ள கவிதை வரிகள் சுப்ஹான மவ்லிதின் வரிகள் என்பதைக் கவனத்தில் கொள்ளவும். இவற்றைத்தாம் பள்ளிகள் தோறும் ரபீஉல் அவ்வலில் நபி புகழ் என்ற பெயரில் அரங்கேற்றப்படுகின்றன.

## இமாம் ஜீலானியின் போதனைகளுக்கு மாற்றமான முஹியித்தீன் மௌலித்

இமாம் அப்துல் காதிர் ஜீலானி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் ஒரு சிறந்த அறிஞரும் சீர்திருத்தவாதியும் ஆவார்கள். அவர்கள் பெயரில் இயற்றப்பட்டு இன்றும் பாடப்பட்டு வரும் மவ்லித்களின் வரிசையில் முஹைதீன் மவ்லிதும் முக்கிய இடம் வகிக்கின்றது.

முஹம்மத் நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களின் பெயரையும், அவர்களின் பரம்பரையான அஹ்லுல் பைத்தினர் பெயரையும் பயன்படுத்தி இந்த சமூகத்தில் பல இணைவைப்புக்கள், பித்அத் அநாச்சார வழிமுறைகள் உட்பிரவேசித்தது போன்று இந்த அறிஞர் பெயரிலும் இணைவைப்புக்கள் பாரிய அளவில் பிரவேசித்துள்ளன.

இணைவைப்புக் கொள்கையில் இருந்து மிகவும் தூரமான, தூய்மையான ஒரு தவ்ஹீத்வாதியான இமாம்

அப்துல் காதிர் ஜீலானி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் பெயரில் பாடப்படும் ஷிர்கான வரிகளை அவதானிக்கின்றபோது இந்த சமுதாயத்தில் மதிப்பும், மரியாதையும் உள்ளவர்கள் ஊடாகவே இவ்வாறான அநாச்சாரங்கள் இந்த சமூகத்தில் ஊடறுக்கின்றன என்பதை உணரலாம். அதைப் பறைசாட்டும் ஒன்றாக முஹைதீன் மவ்லித் விளங்குகின்றது.

இமாம் அப்துல் காதிர் ஜீலானி رَحِمَهُ ٱللَّهُ அவர்களின் கொள்கை உறுதி பற்றி தனது மகன் அப்துல் வஹ்ஹாப் என்பவருக்கு அவர்கள் உபதேசித்து எழுதியதைப் பாருங்கள்.

وقد جاء في وصية الإمام الشيخ عبد القادر الجيلاني نفسه ، لابنه الشيخ عبد الوهاب (( وكل الحوائج كلها إلى الله عز وجل واطلبها منه ، ولا تثق بأحد سوى الله عز وجل ، ولا تعتمد إلا عليه سبحانه ، التوحيد ، التوحيد ، التوحيد )) [مجالس الفتح الرباني ، ص٦٦٥]. انتهى ,(إلى أين !! ..أيها الحبيب الجفري - الدكتور خلدون بن مكي الحسني )

தேவைகள் அனைத்தும் அல்லாஹ்வின் பக்கமே பறைசாட்டப்படல் வேண்டும். எனவே தேவைகளை நிறைவேற்ற அவனிடமே வேண்டிக்கொள். அல்லாஹ் அல்லாத வேறு யாரிலும் நீ நம்பிக்கை வைக்காதே! தூய்மையான அவனை அன்றி வேறு ஒருவரை நீ ஊண்டுகோலாக்காதே! தவ்ஹீத்! தவ்ஹீத்! தவ்ஹீத்! (ஓரிறைக் கொள்கை! ஓரிறைக் கொள்கை!ஓரிறைக் கொள்கை! (என்பதில் உறுதியாக இரு).

*(மஜாலிஸுல் ஃபத்ஹிர் ரப்பானி).*

ஹனஃபி மத்ஹப் அறிஞர்களில் ஒருவரான இமாம் அல்ஹஸ்கஃபி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் "அத்துர்ருல் முக்தாரில்" பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்.

وقال الإمام الحصكفي الحنفي في الدر المختار (٤٨٣/٢) : (( واعلم أن النذر الذي يقع للأموات من أكثر العوام وما يؤخذ من الدراهم والشمع والزيت ونحوها إلى ضرائح الأولياء الكرام تقرباً إليهم فهو بالإجماع باطل وحرام)) انتهى

பாமரர்கள் பலராலும் மரணித்தவர்களுக்காகவென செய்யப்படுகின்ற நேர்ச்சை, அதற்காக பெறப்படும் தங்கம் வெள்ளி போன்ற நாணயங்கள், மெழுகுவர்த்தி, ஒலிவ் (சைதூன்) எண்ணெய் போன்றவைகள் தர்காக்களில் அடங்கப்பட்டுள்ள சங்கைமிக்க இறை நேசர்கள் பெயரில் வணக்கமாகவும், நெருக்கத்தை வேண்டி வழங்கப்படும் இன்னோரன்ன பொருட்கள் அனைத்தும் இஸ்லாமிய அறிஞர்களின் ஏகோபித்த முடிவின் பிரகாரம் ஹராமாகும். (அத்துர்ருல் முக்தார்) இந்த செய்தியை கலாநிதி ஹல்தூன் அல்ஹஸனி அவர்கள் ஷீஆ மத அல்ஜிஃப்ரி என்பவருக்கு எழுதிய மறுப்புரை நூலான, إلى أين !! أيها الحبيب الجفري - الدكتور خلدون بن مكي الحسني என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்கள்.

இமாம் ஜீலானி رَحِمَهُ ٱللَّهُ அவர்களின் அடிப்படையான மேற்படி போதனைகளை முஹைதீன் மவ்லித் பிரியர்கள் எவ்வாறு தகர்த்துள்ளனர் என்பதற்கு அதன் சில கவிதை வரிகள் உதாரணங்களாகத் தரப்படுகின்றன.

وَمَنْ يُنَادِي اسْمِيْ أَلْفًا بِخَلْوَتِهِ، عَزْمًا بِهِمَّتِهِ، صَرْمًا لِعَفْوَتِهِ،
أَجَبْتُهُ مُسْرِعًا مِنْ أَجْلِ دَعْوَتِهِ، فَلْيَدْعُ يَاعَبْدَ الْقَادِرْ مُحْيِ الدِّيْنِ.

யார் ஒவருர் தனது நோக்கத்தில் குறியாக இருந்து, தனது நேசத்திற்குரிவர்களையும் துண்டித்து விட்டு, எனது பெயரை தனிமையில் இருந்து கொண்டு அழைக்கின்றானோ அவனுக்காக நான் விரைந்து பதில் அளிப்பேன். எனவே அவன், அப்துல்காதிர் முஹைத்தீனே என்று அழைக்கவும்.

يَاسَيِّدِيْ سنديْ غَوْثِيْ وَيَامَدِدِيْ - كُنْ لِيْ ظَهِيْرًا عَلَى الْأَعْدَاءِ بِالْمَدَدِ

எனது மாண்புமிகு தலைவரே! எனது உற்ற துணைவரே! எனது அபயக்குரலே! எனது உதவியாளரே! எதிரிகளுக்கு எதிராக உதவிகள் செய்து எனக்கு துணையாளராக இருங்கள்.

மேற்படி கவிதை வரிகள் போதிக்கும் இணை-வைத்தல்களையும் அவற்றில் பொதிந்துள்ள மார்க்-கத்திற்கு முரணான கருத்துக்களையும் நாம் விமர்சனம் செய்யாமலே அதன் விபரீதம் பற்றி நீங்கள் புரிந்து கொள்ளலாம்.

## பிரார்த்தனைகளுக்குப் பதில் அளிப்பவன் அல்லாஹ்வே!

அல்குர்ஆனிலும் அஸ்ஸுன்னாவிலும் பல்வேறு இடங்களில் “ஸமீஉன்” செவியேற்பவன், “அஸ்மஉ”, (நான் செவியேற்கின்றேன்) யஸ்மஉ (அவன்

செவியேற்கின்றான்) என்ற பொருளில் பல வசனங்களில் அல்லாஹ்வின் பண்புகள் இடம் பெற்றிருக்கின்றன.

سَمِيعُ ٱلدُّعَآءِ ﴿٣٨﴾ ﴿آل عمران: ٣٨﴾

“பிரார்த்தனைகளைச் செவியேற்பவன் (பதிலளிப்பவன்) என்ற அல்லாஹ்வின் உயரிய பண்புகளுக்கு மேற்படி பாடல்களில் காணப்படும் வசன நடைகள் ஒப்பானதாக இருப்பதை நீங்கள் அவதானிக்க முடியும். அல்லாஹ்வின் பண்புகளோடு படைப்புக்களின் இன்னொரு பண்பொன்றை ஒப்பிடுவது இணைவைத்தலாகும்.

وَإِذَا سَأَلَكَ عِبَادِى عَنِّى فَإِنِّى قَرِيبٌ أُجِيبُ دَعْوَةَ ٱلدَّاعِ إِذَا دَعَانِ فَلْيَسْتَجِيبُوا۟ لِى ..... ﴿١٨٦﴾ ﴿البقرة: ١٨٦﴾

(நபியே) எனது அடியார்கள் உம்மிடம் என்னைப் பற்றிக் கேட்டால் நிச்சயமாக நான் சமீபாக இருப்பவன். என்னை அழைப்பவன் அழைக்கின்ற போது அழைப்பவனின் அழைப்பிற்கு பதில் கூறுகின்றேன். எனவே அவர்கள் என்னிடமே பதிலை எதிர்பார்த்துப் பிரார்த்தனை செய்யட்டும் (என்று கூறுவீராக) *(அல்-பகரா: 186)*

அழைப்புகளுக்கு பதில் அளிப்பவன் என்ற அல்லஹ்வின் தனித்துவமான பண்பைக் கவனத்தில் கொண்டு அடியார்கள் மரணித்தவர்களிடம் சென்று தமது தேவைகளைக் கூறி மன்றாடுவது மாபெரும் பாவமாகும்.

ஏனெனில் அவர்கள் செவிமடுப்பவர்களோ அல்லது பிரார்த்தனைகளுக்குப் பதில் அளிப்பவர்களோ அல்லர்.

إِنَّمَا يَسْتَجِيبُ ٱلَّذِينَ يَسْمَعُونَ .... ﴿٣٦﴾ ﴿الأنعام: ٣٦﴾

செவியேற்போர்கள்தாம் பதில் தருவார்கள்.

*(அல்-அன்ஆம்: 36)*

وَمِن وَرَآئِهِم بَرْزَخٌ إِلَىٰ يَوْمِ يُبْعَثُونَ ﴿١٠٠﴾ ﴿المؤمنون: ١٠٠﴾

(மரணித்த) "அவர்களுக்குப் பின்னால் அவர்கள் எழுப்பப்படும் நாள் வரை ஒரு திரை இருக்கும்.

*(அல்-மு.்.மினூன்: 100)*

إِن تَدْعُوهُمْ لَا يَسْمَعُوا۟ دُعَآءَكُمْ وَلَوْ سَمِعُوا۟ مَا ٱسْتَجَابُوا۟ لَكُمْ ۖ وَيَوْمَ ٱلْقِيَٰمَةِ يَكْفُرُونَ بِشِرْكِكُمْ ۚ وَلَا يُنَبِّئُكَ مِثْلُ خَبِيرٍ ﴿١٤﴾ ﴿فاطر: ١٤﴾

(மரணித்த) அவர்களை நீங்கள் அழைத்தால், அவர்கள் உங்கள் அழைப்பை செவியுறமாட்டார்கள், (வாதத்திற்கு) அப்படித்தான் செவியுற்றாலும் அவர்கள் உங்களுக்கு பதில் தரமாட்டார்கள், இன்னும் மறுமை நாளில் உங்களின் இணைவைப்பைக் கொண்டு அவர்கள் (அல்லாஹ்விடம்) நிராகரிப்பார்கள், அறிந்தவனை (அல்லாஹ்வை)ப் போல் உமக்கு யாரும் (இது பற்றி) உணர்த்தமாட்டார்கள். *(அத்தியாயம்: பாதிர்: 14)*

إِنَّ ٱلَّذِينَ تَدْعُونَ مِن دُونِ ٱللَّهِ عِبَادٌ أَمْثَالُكُمْ فَٱدْعُوهُمْ فَلْيَسْتَجِيبُوا۟ لَكُمْ إِن كُنتُمْ صَٰدِقِينَ ﴿١٩٤﴾ ﴿الأعراف: ١٩٤﴾

அல்லாஹ்வை அன்றி நீங்கள் யாரை அழைக்கின்றீர்களோ அவர்களும் உங்களைப் போன்ற அடியார்கள்தாம். நீங்கள் அவர்களை அழையுங்கள் (பார்க்கலாம்). நீங்கள் உண்மையாளர்களாக இருப்பின் அவர்கள் உங்களுக்கு பதில் தரட்டும் (அல்-அஃராஃப்: 194)

அதாவது செவியுறுமாட்டார்கள், பதில் தரமாட்டார்கள் என்பது பொருளாகும்.

இந்த சவாலை யாராலும் முறியடிக்கவே முடியாது. அப்படியானால் மரணித்தவர்கள் பதில் தருவார்கள் என்று நம்புவோர் தம்மால் முறியடிக்கலாம் என்று நம்பித்தான் மரிணத்தவர்களிடம் பிரார்த்தனையில் ஈடுபடுகின்றனர் என்று பொருள் கொள்ள வேண்டி இருக்கின்றது.

நோய்களை நீக்குபவன், பிரார்த்தனைகளுக்கு விடையளிப்பவன், செவியேற்பவன், அபயமளிப்பவன் போன்ற அல்லாஹ்வின் பிரத்தியேக பெயர்கள், பண்புகளாகக் கூறப்படும் பண்புகளை நபி ﷺ அவர்களுக்கும், அவ்லியாக்களுக்கும் வழங்கி, அவர்களிடம் அபயம்தேடி, பாதுகாப்பு வேண்டப்பட்டிருப்பது மௌலிதுகளில் காணப்படும் மிகப் பெரும் இணைவைத்தல் என்பது இங்கு உணர்த்தப்பட வேண்டிய அடிப்படையாகும்.

قُلِ ٱدۡعُواْ ٱللَّهَ أَوِ ٱدۡعُواْ ٱلرَّحۡمَٰنَۖ أَيّٗا مَّا تَدۡعُواْ فَلَهُ ٱلۡأَسۡمَآءُ ٱلۡحُسۡنَىٰۚ ﴿١١٠﴾

﴿ الإسراء: ١١٠ ﴾

அல்லாஹ்வையோ, அல்லது அர்ரஹ்மானையோ அழைத்துப் பிரார்த்தியுங்கள். நீங்கள் எவ்வாறு (அவனை) அழைத்துப் பிரார்த்தித்த போதும் அவனுக்கு மிக்க அழகிய பெயர்கள் இருக்கின்றன.

(அல்-இஸ்ரா: *110*)

அதாவது: பிரார்த்தனை செய்கின்ற போது நீங்கள் யாஅல்லாஹ்! என்று பிரார்த்தனை செய்வதும், யாரஹ்மான் என்று பிரார்த்தனை செய்வதும் சமமே! அது அல்லாஹ்வைத்தான் குறிக்கும்.

وَلِلَّهِ ٱلۡأَسۡمَآءُ ٱلۡحُسۡنَىٰ فَٱدۡعُوهُ بِهَاۖ وَذَرُواْ ٱلَّذِينَ يُلۡحِدُونَ فِيٓ أَسۡمَٰٓئِهِۦۚ سَيُجۡزَوۡنَ مَا كَانُواْ يَعۡمَلُونَ ﴿١٨٠﴾ ﴿ الأعراف: ١٨٠ ﴾

அல்லாஹ்வுக்கு மிக்க அழகிய பெயர்கள் இருக்கின்றன. அவைகள் மூலம் அவனை நீங்கள் அழையுங்கள், அவனது திருநாமங்களில் திரித்துக் கூறுவோரை நீங்கள் விட்டு விடுங்கள். அவர்கள் எதனைச் செய்து கொண்டிருந்தார்களோ அதற்காக அவர்கள் கூலி கொடுக்கப்படுவார்கள்.

(அல்-அ்.ரா்.ப் : *180*)

நானே அனைத்தினதும் அதிபதி, எனக்கே சகல அதிகாரமும் உண்டு என அல்லாஹ் அறிவித்திருக்க, அவனை விட்டு விட்டு கப்ரில் அடங்கப்பட்ட மனிதர்களிடம் செல்வோர் நிலைபற்றி என்ன-வென்பது! இவ்வாறானவர்களுக்கு கூலி நரகம்தான் என்று அல்லாஹ் எச்சரிக்கின்றான்.

அதனால்தான் அவ்லியாக்களை வணங்கி, வழிபடுவோர் நேர்ச்சைகள் செய்து திருவிழாக்கள் நடாத்துகின்றனர். இது எவ்வளவு பெரிய பாவம் என்று சிந்தனை செய்து பாருங்கள்.

அல்லாஹ்வே நோய்க்கு நிவாரணம் அளிப்பவன் என்பதை அறிந்த முஸ்லிம் முஹம்மத நபி ﷺ அவர்களிடம் நிவாரணம் வேண்டி அவர்களின் மண்ணறையில் பிரார்த்தனை செய்வானா என்று சிந்திக்க வேண்டும்.

உலகில் சிறந்த மனிதராகிய முஹம்மத் ﷺ அவர்களுக்கு நோய் ஏற்பட்டபோது நிவாரணம் வேண்டி அல்லாஹ்விடம் முறைப்பாடு செய்தார்களே அன்றி, தானே அதனை குணப்படுத்திக் கொள்வேன் என்று கூறவே இல்லை.

أَذْهِبْ الْبَاسَ رَبَّ النَّاسِ اشْفِ وَأَنْتَ الشَّافِي لَا شِفَاءَ إِلَّا شِفَاؤُكَ شِفَاءً لَا يُغَادِرُ سَقَمًا (خ/م/حم)

மனிதர்களின் இரட்சகனே! நோயை போக்கிவிடு, நீதான் குணமளிப்பவன், நீ குணத்தை தருவாயாக! உனது நிவாரணத்தை அன்றி வேறு நிவராணம் இல்லை. நோயை விட்டுவைக்காத குணத்தை தருவாயாக! (ஆதார நூல்கள்: புகாரி, முஸ்லிம், அஹ்மத்)

என பிரார்த்தனை செய்வார்கள். அவ்வாறு செய்யுமாறு தமது தோழர்களையும் பணிப்பார்கள் என நபி மொழி சொல்கின்றது.

## அல்லாஹ்வே தவறுகளை மன்னிப்பவன், அழைப்புகளுக்கு பதிலளிப்பவன்

அல்லாஹ் அல்லாதவர்களைக்கொண்டு அழைப்பதும், அவர்களிடம் தேவைகளை வேண்டுவதும் பெரும்பவாங்களில் ஒன்றாகும். நபி ﷺ அவர்கள் இந்த நம்பிக்கையையும் சேர்த்தே மக்காவில் எதிர்த்துப் போராடினார்கள்.

அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யாது புறக்கணித்து நடப்பது நரகத்திற்கு இட்டுச் செல்லும் செயலாகும் என்று அல்லாஹ் தனது திருமறையில் குறிப்பிடுகின்றான்.

وَقَالَ رَبُّكُمُ ٱدْعُونِىٓ أَسْتَجِبْ لَكُمْ ۚ إِنَّ ٱلَّذِينَ يَسْتَكْبِرُونَ عَنْ عِبَادَتِى سَيَدْخُلُونَ جَهَنَّمَ دَاخِرِينَ ﴿٦٠﴾ ﴿غافر: ٦٠﴾

என்னையே நீங்கள் அழையுங்கள். உங்களுக்கு நான் பதில் அளிப்பேன். நிச்சயமாக எவர்கள் என்னை வணங்குவதை (அழைப்பதை) விட்டும் பெருமை அடிக்கின்றார்களோ அவர்கள் இழிவடைந்தவர்களாக நரகத்தில் நுழைவார்கள் என்று உமது இரட்சகன் கூறிவிட்டான். (அல்கா:ஃபிர்: 60)

وَإِذَا سَأَلَكَ عِبَادِى عَنِّى فَإِنِّى قَرِيبٌ ۖ أُجِيبُ دَعْوَةَ ٱلدَّاعِ إِذَا دَعَانِ ۖ فَلْيَسْتَجِيبُوا۟ لِى وَلْيُؤْمِنُوا۟ بِى لَعَلَّهُمْ يَرْشُدُونَ ﴿١٨٦﴾ ﴿البقرة: ١٨٦﴾

(நபியே)! எனது அடியார்கள் என்னைப் பற்றி உம்மிடம் கேட்டால் நிச்சயமாக நான் சமீபமானவன்,

அழைப்பவன் என்னை அழைக்கின்றபோது நான் அழைப்பவனுக்குப் பதில் அளிக்கின்றேன். எனவே அவர்கள் நேர்வழி பெறும் பொருட்டு என்னிடம் பதிலை எதிர்பார்க்கட்டும். என்னை ஈமான் கொள்ளட்டும். (என்று கூறிவிடும்).

அல்லாஹ் அடியார்களுக்கு சமீபமாக இருக்கின்றான் என்ற உயர்ந்த பண்பாட்டு நெறியை அல்லாஹ்வுடன் பேணி அழைப்பதைத்தான் அவன் கற்றுத்தரு-கின்றான்.

ٱدۡعُواْ رَبَّكُمۡ تَضَرُّعٗا وَخُفۡيَةًۚ إِنَّهُۥ لَا يُحِبُّ ٱلۡمُعۡتَدِينَ ﴿٥٥﴾ ﴿الأعراف: ٥٥﴾

நீங்கள் உங்கள் இரட்சகனை பணிவோடும், இரகசியமாகவும் அழையுங்கள். நிச்சயமாக அவன் வரம்பு மீறுவோரை நேசிப்பதில்லை. *(அல்அ.்.ரா.்.ப்: 55)*

قُلِ ٱدۡعُواْ ٱللَّهَ أَوِ ٱدۡعُواْ ٱلرَّحۡمَٰنَۖ أَيّٗا مَّا تَدۡعُواْ فَلَهُ ٱلۡأَسۡمَآءُ ٱلۡحُسۡنَىٰۚ وَلَا تَجۡهَرۡ بِصَلَاتِكَ وَلَا تُخَافِتۡ بِهَا وَٱبۡتَغِ بَيۡنَ ذَٰلِكَ سَبِيلٗا ﴿١١٠﴾ ﴿الإسراء: ١١٠﴾

நீங்கள், "அல்லாஹ்" என்றோ, அல்லது "அர்ரஹ்மான்" என்றோ அழைத்துப் பிராத்தியுங்கள். நீங்கள் எப்படி அழைத்தபோதும் அவனுக்கு மிக்க அழகிய திருநாமங்கள் பல உள்ளன. (நபியே! தொழுகையில்) உமது ஓதலினால் சப்தத்தை உயர்த்தவோ, மிகவும் தாழ்த்திடவோ வேண்டாம். அவ்விரண்டிற்கும் மத்திபமான ஒரு நிலையைக் கடைப்பிடிப்பீராக!

*(அல்-இஸ்ரா: 110)*

உயர்வான, உயர்ந்த அர்ஷின் இரட்சனாகிய அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்து அழைக்கின்ற போது மௌனமாகவும், பணிவாகவும் அழைப்பது அவனுடன் உரையாடும் ஒழுங்கு முறையில் ஒன்றாகும். இதுபற்றி நபி ﷺ அவர்கள் தனது தோழர்களுக்கு பின்வருமாறு கற்றுக் கொடுத்துள்ளார்கள்.

நாம் நபிகள் நாயகம் ﷺ அவர்களுடன் (ஒரு பயணத்தில்) இருந்தோம். அப்போது நாங்கள் ஒரு பள்ளத்தாக்கை காண்கின்ற போது "அல்லாஹு அக்பர்" என்று சப்தமிட்டுக் கூறுவோம். இதனை அவதானித்த அல்லாஹ்வின் தூதர் அவர்கள் எம்மை அழைத்து:

يَا أَيُّهَا النَّاسُ ارْبَعُوا عَلَى أَنْفُسِكُمْ فَإِنَّكُمْ لَا تَدْعُونَ أَصَمَّ وَلَا غَائِبًا إِنَّهُ مَعَكُمْ إِنَّهُ سَمِيعٌ قَرِيبٌ تَبَارَكَ اسْمُهُ وَتَعَالَى جَدُّهُ (صحيح البخاري)

மனிதர்களே! உங்கள் மனதுகளுக்குள் (திக்ர்) செய்து கொள்ளுங்கள். நிச்சயமாக நீங்கள் செவிப்புலன் அற்றவனையோ, உங்களை விட்டும் மறைந்திருப்பவனையோ அழைக்கவில்லை. மாற்றமாக, உங்களுடன் இருப்பவனையே நீங்கள் அழைக்கின்றீர்கள். நிச்சயமாக அவன், நன்கு செவியுறுபவன், சமீத்தில் இருப்பவன். அந்த அல்லாஹ் உயர்வும், கீர்த்தியுமிக்கவன் எனக் கூறினார்கள்.

(புகாரி)

## பாவத்தை அல்லாஹ்தான் பொறுக்க வேண்டும்

பாவம் செய்வது, தவறுகள் புரிவது மனித இயல்பாகும். எனவே அதற்காக அல்லாஹ்விடமே மனிதர்கள் தமது தவறுகளை முன் மொழிந்து மன்னிப்புக்கோர வேண்டும்.

மரணித்த மனிதர்களிடம் ஏன் உயிருடன் இருக்கின்ற வானவர்களிடம் கூட தமது பாவங்களை மன்னிக்கும் படி கோருவது மிகப் பெரும் தவறாகும்.

அல்லாஹ் மன்னிக்க வேண்டிய தவறுகளை அவன் அல்லாதவர்களிடம் மன்னிக்கக் கோருவது இணை-வைத்தலும், பெரும் குற்றமுமாகும் என்ற அடிப்படைகள் மீறப்பட்ட நிலையில் இந்தக் கவிதை வரிகள் பாடப்படுவது நன்மைகளை அள்ளித்தருமா? பாவங்களைக் கொண்டுவருமா என்று சிந்திக் வேண்டும்.

يَا عِبَادِي إِنَّكُمْ تُخْطِئُونَ بِاللَّيْلِ وَالنَّهَارِ وَأَنَا أَغْفِرُ الذُّنُوبَ جَمِيعًا
فَاسْتَغْفِرُونِي أَغْفِرْ لَكُمْ (صحيح مسلم)

எனது அடியார்களே! நீங்கள் இரவுபகலாக தவறு செய்கின்றீர்கள். நான்தான் தவறுகள் அனைத்தையும் மன்னிக்கின்றேன். எனவே என்னிடமே நீங்கள் மன்னிப்பு வேண்டுங்கள். நான் உங்களுக்கு மன்னிப்புத் தருவேன் என்பது அல்லாஹ்வின் வாக்காகும். *(முஸ்லிம்)*

يَا عِبَادِي لَوْ أَنَّ أَوَّلَكُمْ وَآخِرَكُمْ وَإِنْسَكُمْ وَجِنَّكُمْ قَامُوا فِي صَعِيدٍ وَاحِدٍ فَسَأَلُونِي فَأَعْطَيْتُ كُلَّ إِنْسَانٍ مَسْأَلَتَهُ مَا نَقَصَ ذَلِكَ مِمَّا عِنْدِي إِلَّا كَمَا يَنْقُصُ الْمِخْيَطُ إِذَا أُدْخِلَ الْبَحْرَ (صحيح مسلم )

எனது அடியார்களே! உங்களில் ஆரம்பகாலத்தவர்கள், இறுதியாக வருவோர், மேலும், உங்களிலுள்ள மனித இனம், மற்றும் உங்களிலுள்ள ஜின்கள் அனைவரும் ஒரு திடலில் ஒன்று கூடி, அவர்கள் அனைவரும் என்னிடம் கேட்கின்ற போது அவர்கள் ஒவ்வொருவரது கேள்விக்கும் நான் அவர்களுக்கு கொடுப்பதைக் கொடுத்தாலும் கடலில் ஊசியைப் போட்டு எடுக்கின்ற அளவு எவ்வளவு குறையுமோ அவ்வளவு போன்றுதான் என்னிடம் உள்ள (கருவூலம்) குறையும் என அல்லாஹ் கூறுவதாக நபிகள் நாயகம் صَلَّى ٱللَّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம்)

உலகக் கருவூலங்களின் அதிபதியாகிய அல்லாஹ்விடம் உரிமையுடன் மன்றாடி தனது தேவைகளை அவனிடமே அடியான் நேரடியாகக் கேட்டுப்பெற வேண்டும்.

மவ்லிதின் வரிகளில் இஸ்லாமிய அடிப்படைப் போதனைகளுக்கு மாற்றமான நூற்றுக்கணக்கான பல மார்க்க முரண்பாடுகள் காணப்படுகின்றன. எனவே அவற்றை ஒருமு.்.மினின் அமல்களை அழிக்கும் பாடல்கள் என்பீர்களா? அல்லது அவைகள் பக்குவமாகப் பாதுகாக்கப்பட வேண்டும் என்பீர்களா?

ஒரு முஸ்லிமின் அடிப்படையான கலிமா, மற்றும் ஈமானிய அடிப்படைகளை விட்டும் அவனைத் தூரமாக்கிடும் இந்தக் கவிதை வரிகள் யாரால் எழுதப்பட்டாலும் சரி அவை முஹம்மத் நபி ﷺ அவர்களின் போதனைகளுக்கு நேர் மாற்றமாக இருப்பது மட்டுமின்றி, முஸ்லிம் சமூகத்தின் சாபக்கேடுமாகும்.

முஹம்மத் நபி ﷺ அவர்களை நேசிக்கின்றோம் என்ற பெயரில் பள்ளிவாசல்கள், வீடுகள், கடைகள் என அனைத்து இடங்களிலும் பரகத் வேண்டி, துன்பங்கள் நீங்கிட மௌலிதுகள் பாடப்படுகின்றனவே! அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் உயிருடன் இருந்தால் இவற்றிற்கு என்ன தீர்ப்பளிப்பார்கள் என்று நாம் சிந்திக்க வேண்டாமா?

## ஷீஆக்களின் நம்பிக்கைகள் சில

1) நபிகள் ﷺ அவர்களின் மரணத்திற்குப் பிறகு அலி رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களும் அவர்களின் பரம்பரையில் வந்த பன்னிரெண்டு இமாம்கள் மாத்திரமே ஆட்சி செய்யத் தகுதியானோர். அதை அலி رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களுக்கு வழங்காது கலீ·.பாக்கள் அபகரித்துக் கொண்டனர்.

2) அல்குர்ஆனில் அலி رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களின் ஆட்சியை அறிவுறுத்தும் வகையில் அமைந்த “அல்விலாயா” என்ற அத்தியாயத்தை? அல்குர்ஆனை ஒன்று சேர்த்த போது நபித்தோழர்கள் குறிப்பாக, அபூபகர் ஸித்தீக்

رَضِيَٱللَّهُعَنْهُ, உமர் رَضِيَٱللَّهُعَنْهُ ஆகியோர் திட்டமிட்டே இருட்டடிப்புச் செய்துள்ளனர்.

3) அல்குர்ஆனில் அஹ்லுல் பைத்தினர்கள் ஆட்சி தொடர்பாக இடம்பெற்ற பல வசனங்களை ஸஹாபாக்கள் வேண்டுமென்றே மாற்றி அமைத்தனர். சிலவற்றை இல்லாதொழித்தனர்.

4) பன்னிரெண்டு சொச்சம் நபித்தோழர்களைத் தவிர ஏனெய அனைவர்களும் இஸ்லாத்தை விட்டும் மதம் மாறிச் சென்றுவிட்டனர்.

5) நபியின் மரணத்தின் பின்னால், அலி رَضِيَٱللَّهُعَنْهُ அவர்களுக்கு கைமாற வேண்டிய ஆட்சியை அபூபகர் ஸித்தீக் رَضِيَٱللَّهُعَنْهُ, உமர் رَضِيَٱللَّهُعَنْهُ ஆகியோர் தமது தந்திர புத்தியால் தமதாக்கிக் கொண்டனர். அபகரித்துக் கொண்டனர்.

6) அன்னை ஆயிஷா رَضِيَٱللَّهُعَنْهَا, மற்றும் ஹ.்.ப்ஸா رَضِيَٱللَّهُعَنْهَا ஆகியோர் அவர்கள் தகாத நடத்தையுடைய பெண்கள் விபச்சாரிகள் (அவூது பில்லாஹ்)

7) நபித்தோழர்களும் அவர்கள் வழிவந்த இமாம்களும் நபிவழி நடக்கும் சுன்னத் வல்ஜமாஅத் முஸ்லிம்களும் காபிர்கள், நஜீஸ்கள்.

8) அல்லாஹ்விடம் நேரடியாகப் பிரார்த்தனை செய்வது "ஷிர்க்" எனவே ஷீஆ ஒருவர் பிரார்த்தனை செய்கின்ற போது மரணித்த தமது இமாம்களான அலி رَضِيَٱللَّهُعَنْهُ, மற்றும் ஹுஸைன் رَضِيَٱللَّهُعَنْهُ அவர்களை அழைப்பது பர்ள் ஆகும்.

அதனால்தான் அவர்கள் பிரார்த்தனை செய்கின்ற போது يا علي ، يا فاطمة ، يا حسين எனக் கூறி பிரார்த்தனை செய்வார்கள். இன்னும் பல.

இதன் பின்னரும் மவ்லித் ஓதப் பிரியப்படுவோர் ஷீஆக்களை மறைமுகமாக ஆதரிப்போராகவே இருக்க முடியும் என சந்தேகிக்க வேண்டியுள்ளது.

## ஐமும் தெளிவும்

***ஐயம்:*** மவ்லித் நபி ﷺ அவர்களின் காலத்தில் இல்லாத ஒரு நடைமுறையாக இருந்தாலும் அது சுன்னத்தான ஒன்றாக இருக்க முடியாதா?

*தெளிவு:* முஸ்லிம் உலகில் அங்கீகரிக்கப்பட்ட இஸ்லாமிய அறிஞர்களுள் ஒருவரான இமாம் ”இப்னுஸ்ஸலாஹ்” رَحِمَهُ ٱللَّٰهُ அவர்கள் சுன்னா (நபியின் வழி முறையை) ஹதீஸ்களின் துணை கொண்டு இரண்டாக வகுக்கின்றார்கள்.

### *1) நபிகள் நாயகம் ﷺ அவர்கள் செய்து காட்டியவைகள்*

உதாரணமாக: ஸிவாக் (மிஸ்வாக்) செய்தல், தர்மம் கொடுத்தல், உண்ணுதல், பருகுதல், சிகை அலங்காரம் செய்தல் போன்றவற்றிற்கு ஒப்பான பல வழிமுறைகள்.

### *2) செய்யாது விட்டு விட்டவை*

உதாரணமாக: ஐங்காலத் தொழுகை முடிந்ததும் கூட்டாகப் பிரார்த்திக்காது தனிமையாக திக்ர்

செய்தமை, பெருநாள் தொழுகைகளை பாங்கு இகாமத், சுன்னத்தான தொழுகைகள் எதுவும் இன்றி நடாத்தியமை, பாங்கின் முன் ஸலவாத் இன்றி பாங்கைக் கற்றுத் தந்தமை போன்றவற்றைக் குறிப்பிட முடியும். *(தழுவல்: ஸியானது ஸஹீஹ் முஸ்லிம் பக்கம்: 2-5)*

அடுத்ததாக நபி ﷺ அவர்களின் காலத்தில் இல்லாத ஒரு புதிய வழிமுறையை கடமையான தொழுகை மற்றும் இதர வணக்கங்கள் போலாக்கி ஓதிவருவதை, கொண்டாடுவதை உலகில் அங்கீகரித்தவர்கள் யார்?

நபித்தோழர்கள் முதல் அவர்களின் வழி வந்த எந்த இமாம்களும் அதனை அங்கீகரிக்கவில்லையே! மவ்லி-தைப் பாடுவோர் அறிவால் விளக்கத்தால் முன்னோர்-களான நபித்தோழர்கள், தலை சிறந்த இமாம்களை விடவுமா சிறந்தவர்கள்? இமாம் மாலிக் رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் குறிப்பிடுவது போன்று:

وما لم يكن يومئذ دينا فلا يكون اليوم دينا (الاعتصام للشاطبي)

“அந்தக் காலத்தில் மார்க்கமாக இல்லாமல் இருந்த ஒன்று இந்தக்காலத்திலும் மார்க்கமாக இருக்கவே முடியாது.” *(அல்-இ:.திஸாம்)*

## அன்பான அழைப்பு

மவ்லிதை ஓதி, மீலாத் விழா நடாத்தும் சகோதரர்களே! முதலாவதாக உங்கள் நடைமுறையால் நபி ﷺ அவர்களை நேசியுங்கள்.

நபி ﷺ அவர்கள் எப்படித் தொழுதார்கள்? எவ்வாறு திருமணம் செய்தார்கள்? எவ்வாறு செய்யச் சொன்னார்கள்? எவ்வாறு ஆடை அணியச் சொன்னார்கள்? இல்லற வாழ்வில் எவ்வாறு ஈடுபடுமாறு வழிகாட்டினார்கள்? குழந்தைகளை எவ்வாறு வளர்த்தார்கள்? அண்டை அயலவர்கள், ஏழைகள் விருந்தினர்கள், எதிரிகள், தமது மனைவி மக்களோடு எவ்வாறு நடந்து கொண்டார்கள்?

தாடி எவ்வாறு வளர்த்தார்கள்? மீசை எவ்வாறு வைத்திருந்தார்கள்? எவ்வாறு உறங்கினார்கள்? உணவருந்தினார்கள்? நீர் பருகினார்கள்? காலை, மாலை என்ன “திக்ர்”கள், பிரார்த்தனை ஓதினார்கள்.? என்பன போன்ற நூற்றுக்கணக்கான நபியின் உண்ணத நடைமுறையை உங்கள் அன்றாட வாழ்வில் கடைப்பிடியுங்கள். உங்கள் வாழ்வில் இதைவிடப் பெரிய மீலாத் கொண்டாட்டம் உங்களுக்கு இருக்கவே முடியாது.

## புர்தா ஒரு பன்முகப் பார்வை

புர்தா காப்பியம் அல்லது காவியம் என்பது மவ்லித்களைப் போன்று அரபிப் பாடல்களில் அமைந்த கவிதைகளாகும். இதன் ஆசிரியர் ஷாதுலிய்யா தரீக்காவாதியான பூஸரி என்ற கவிஞராகும்.

இந்தக் காவியங்கள் சுன்னா முஸ்லிம்களான ஷா.ஃ.பி மத்ஹப் சார்ந்த மக்கள் மத்தியில் மார்க்க அறிவின்மை காரணமாகப் பரவியதோடு அவர்களின் மௌலவிகள் மத்தியில் அமோக வரவேற்பைப் பெற்ற பாடல்களாக மாறி இருப்பதை மறுக்க முடியாது.

மவ்லிதின் வரிகளில் காணப்படும் ஷிர்க்கைப் போன்று இதிலும் ஷிர்க் ஏராளமாகக் காணப்படுகின்றது. அதனால் அதனை பன்முகப் பார்வையில் ஆய்வு செய்வதும் அது தொடர்பான பின்னணி அறிவைப் பெறுவதும் அவசியமாகும்.

## புர்தா கவித் தொகுப்பு ஆசிரியர் வாழ்க்கைக் குறிப்பு

பூஸரி என்ற பெயரில் பலர் அறியப்பட்டிருப்பினும் விஷேடமாக இருவர் முஸ்லிம் உலகில் அறியப்பட்டிருந்தனர். ஒருவர் மிகச் சிறந்த ஹதீஸ்கலை அறிஞர்.

அவரது பெயர் :

شهاب الدين أحمد بن أبى بكر بن إسماعيل بن سليم بن قايماز بن عثمان بن عمر الكنان. شهاب الدين البوصيرى الشافعى ، نزيل القاهرة (السلوك لمعرفة دول الملوك / أبو العباس أحمد بن علي بن عبد القادر، الحسيني العبيدي، تقي الدين المقريزي (إنباء الغمر بأبناء العمر في التاريخ \ الإمام / شهاب الدين أبي الفضل أحمد بن علي بن حجر العسقلاني \ الأعلام للزركلي )

واشتغل قليلا وسكن القاهرة ، ولازم شيخنا العراقي على كبر فسمع نه الكثير

அபுல் அப்பாஸ் ஷிஹாபுத்தீன் அஹ்மத் பின் அபீபக்கர் (அப்துர் ரஹ்மான்) பின் இஸ்மாயீல் பின் காய்மாஸ் பின் உஸ்மான் பின் உமர் அல்கினானி அல்பூஸைரி அஷ்ஷாபிஈ என்பதாகும்.

இவர் ஹிஜ்ரி 762ல் எகிப்தில் பூஸைர் என்ற நகரில் மேல் மாகாணத்தில் பிறந்தார். ஹிஜ்ரி 840 மரணமானார். இவர், இமாம் இராக்கி அவர்களின் சிரேஷ்ட மாணவர்களில் ஒருவர்.

ஹதீஸ்களை தேடிப்படித்த மாமேதைகளின் வரிசையில் இடம் பெறும் புகழ்பூத்த அறிஞராக விளங்கும் இவர், زوائد ابن ماجه என்ற பெறுமதிமிக்க ஹதீஸ் தொகுப்பின் நூலின் ஆசிரியராகும். (அல்அ.ஃ.லாம் - அஸ்ஸர்கலி, அஸ்ஸியர் - அத்தஹபி). அல்லாஹ் அன்னாரின் மண்ணறையை பிரகாசமாக்குவானாக!

மற்றவர் எகிப்தில் மன்னர்களுக்கு வால் பிடித்து, கவிபாடி தனது காலத்தை ஓட்டிய கவிஞன். அவரைப் பற்றிய முக்கிய குறிப்புத்தான் இங்கு தரப்படுகின்றது.

பெயர்:

محمد بن سعيد بن حماد بن عبد الله الصنهاجي البوصيري المصري شرف الدين، شاعر مشهور (الأوهام الواقعة في أسماء العلماء والأعلام – ١ : ٧)

முஹம்மத் பின் ஸயீத் பின் ஹம்மாத் பின் அப்தில்லாஹ் அஸ்ஸன்ஹாஜி, அல்பூஸைரி அல்மிஸ்ரி. பிரிசித்தி பெற்ற அரபுக் கவிஞர்.

பிறப்பு: மொரோக்கோவில் ஹிஜ்ரி 608ல் பிறந்து எகிப்தில் அபூ ஸைர் என்ற கிராமத்தில் வளர்ந்தார். இந்த மாநிலத்தை குறிக்கும் முகமாவே பூஸைரி என்று அரபியில் அவர் அறியப்படுகின்றார். இவரை பூஸரி என தமிழ் உலகில் எழுதுகின்றனர்.

இவர் சூ∴பிஸ சிந்தனையாளராகவும், ஷாதுலிய்யா தரீக்காவாதியாகவும் இருந்தார். எழுதுவினைஞர், இலிகிதர் துறையில் போதிய அறிவில்லாதவராக இருந்த இவர் எழுத்தர் தொழில் செய்து வந்தார் என அவரது வாழ்வியல் குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

## கல்வி நிலை

ஆரம்ப கால அறிஞர்களைப் போன்று இவர், ஆலிம் (மார்க்க கல்வியலாளர்), ∴பகீஹ் (மார்க்க சட்டமேதை) என்ற நிலையில் இல்லாத ஒரு சாதாரண எழுத்தறிவு உள்ளவராக இருந்தார். அதனால் அவரை பிரசித்தி பெற்ற எகிப்திய கவிஞர் என்று குறிப்பிட்டுள்ளார்களே அன்றி மார்க்கத்தை துறைபோகக் கற்ற இமாம்கள், அறிஞர்களின் வரிசையில் இவரை யாரும் பதிவு செய்யவில்லை.

இவர் மார்க்கக் கல்வியில் மிகப் பின் தங்கிய நிலையில் காணப்பட்டார். மட்டுமின்றி, இவர், நல்ல மனிதராகவோ, வணக்கத்தில் ஈடுபாடு கொண்ட-வராகவோ இருக்கவில்லை என்று அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

இவர் தனது நாவினால் மக்களை அசிங்கமான வார்த்தைகளால் திட்டித் தீர்க்கும் வழக்கமுடைய ஒருவராக இருந்ததால் இவர் அக்கால மக்களால் சபிக்கப்பட்ட ஒரு மனிதனாக இருந்துள்ளார். இதனால் அரசர்களுக்கு வால் பிடித்து கவி பாடி தனது காலத்தை ஓட்டினார் என்பதே உண்மை.

இவர் தனது மனைவியோடு தனது காம இச்சையைத் தீர்த்துக் கொள்ள முடியாது போனது பற்றியும் உலகுக்கு தெரியப்படுத்தி உள்ளார் என்றால் இவரது ஒழுக்க பண்பாடுகள் பற்றி நீங்கள் முடிவு செய்து கொள்ளலாம். இந்த பூஸரி ஹிஜ்ரி: 995 ல் எகிப்து நகரான இஸ்கந்தரிய்யாவில் மரணமானார்.

தழுவல்: (الجامع في المولد- ٤ : ٥) \ المؤلف : مجموعة من المؤلفين

வரும் தொடர்களில் இவரின் பாடல் வரிகளில் காணப்படும் இணைவைப்புக்கள் பற்றி நாம் எடுத்தெழுத இருக்கின்றோம்.

## புர்தா என்பதன் பொருள் என்ன? அதன் பெயர் எப்படி வந்தது?

புர்தா என்றால் மேனியில் போர்த்தப்பட்டிருக்கும் பிடைவைத் துணியைக் குறிக்கும். அதனை போர்வை என்று சுருக்கமாகக் கூறலாம். இந்தப் போர்வை என்ற பொருளுக்கும் இந்தப்பாடல்களுக்கும் இடையில் காணப்படும் உறவு? அதன் பின்னணி வரலாறு பற்றிய அறிவு முக்கியமானதாகும். பூசரியே சொல்வதைக் கேளுங்கள்

قال البوصيري: كنت قد نظمت قصائد في مدح رسول الله صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ، منها ما كان اقترحه علي الصاحب زين الدين يعقوب بن الزبير، ثم اتفق أن أصابني فالج أبطل نصفي، ففكرت في عمل قصيدتي هذه البردة فعملتها،

واستشفعت به إلى الله تعالى في أن يعافيني، وكررت إنشادها وبكيت ودعوت وتوسلت، ونمت فرأيت النبي صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ، فمسح على وجهي بيده المباركة، وألقى علي بردة فانتبهت، ووجدت في نهضة فقمت وخرجت من بيتي، ولم أكن أعلمت بذلك أحد ... ((فوات الوفيات - (٣ / ٣٦٨) \ المؤلف : محمد بن شاكر الكتبي. \ المحقق : إحسان عباس))

பூஸரி நபிகள் நாயகம் صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களைப் புகழ்ந்து கவிபாடி இருந்தாராம். அவைகளை ஏற்கெனவே ஸைனுத்தீன் யஃகூப் பின் சுபைர் என்பவரிடம் காண்பித்தும் இருந்துள்ளார். பின்னர் அவர் (Paralysis) பக்கவாதத்தால் பாதிக்கப்படடவராக இருந்ததன் காரணமாக இந்தக் கவிதைகளை அழுது அழுது கண்ணீர் சிந்தி திரும்பத் திரும்பப் பாடி அதற்கான நிவாரணம் வேண்டி (சிகிச்சை செய்யாது) பாடி வந்தாராம்.

தனது தீராத இந்த நோய்க்கு நிவாரணம் கிடைக்காத நிலையில் அல்லாஹ்விடம் குணத்தை வேண்டாமல் தான் புணைந்த புர்தாவின் பாடல்களை நபி صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களைப் புகழ்ந்து பாடிய புர்தாக் கவிதைகள் மூலம் அல்லாஹ்விடம் நோய் நிவாரணி கேட்டு விட்டு ஒரு நாள் உறங்கிவிட்டாராம்.

பூசரி கூறுகின்றார், நான் உறங்கி விட்டேன். அந்த இரவு நபி صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்களை கனவில் கண்டேன். அவர்கள், தமது மகத்தான கரத்தால் எனது முகத்தில் தடவி, தனது போர்வையையும் அவரது மேனியின் மேல் போர்த்தி விட்டார்களாம். என்ன ஆச்சரியம்!

இத்தோடு தான் திடீரென உணர்வுபெற்று மீண்டும் குதித்து எழுந்தாராம் பின்னர் வீட்டை விட்டும் வெளியேறிச் சென்றாராம். என்னே புதினம்! தீராத இவரது நோய் உடனடியாக தீர்ந்ததாம். அந்த நோய்க்காக பூரண நிவாரணமும் கிடைத்ததாம்.

இதில் அதிசயம் என்னவெனில் இவர் இது பற்றி யாரிடமும் கூறவில்லையாம். இருந்தும் கிராமவாசி ஒருவர் தன்னிடம் வந்து இரவு நீர் பாடிய அந்தப் பாடல் காப்பியங்களை எனக்குக் கொடு என்றாராம். நான் அதனை யாருக்கும் இது பற்றி அறிவிக்காத நிலையில் அவர் என்னிடம் கேட்டு பெற்றது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நான் அவர் கேட்டபடி அந்தக் கவிதைத் தொகுப்புக்களை அவருக்கு ஒப்படைத்தேன்.

((فوات الوفيات – (٣ / ٣٦٨) \ المؤلف : محمد بن شاكر الكتبي. \ المحقق : إحسان عباس))

கவிஞர் பூசரி உடைய மற்றொரு புதினம் என்னவென்றால் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் இந்த கவிதை வரிகளைப் பாடியதைக் கேட்ட போது நயத்தோடு அசைந்து கேட்டார்களாம் எனக் குறிப்பிடுகின்றனர் சில ஆய்வாளர்கள்.

இந்தச் சம்பவம் எகிப்திய கிராமங்கள் தோறும் காட்டுத்தீயாகப் பரவி, பொதுமக்கள் மத்தியில் அமோக வரவேற்பைப் பெற்றதாகக் குறிப்பிடும் இந்தச் சம்பவத்தில் தனியான சூபித்துவ வாடை நிரம்பி இருப்பதை மறுக்க முடியாது.

பூசரி தனது நோய்க்கு சிகிச்சை கிடைத்ததாக இங்கு உளறித் தள்ளி இருப்பதானது சூ.ஃபிகள் மற்றும் தரீக்கா வழிவந்தவர்கள் மத்தியில் அமோக வரவேற்பைப் பெற்றுள்ள காரணத்தினால்தான் நாட்டின் சில அரபுக்கல்லூரிகளில் வெள்ளிக்கிழமை தோறும் மாணவர்கள் இந்தப் பாடல்கள் பாடுவதை சட்டமாக்கி வைத்திருப்பதையும், அந்தக் கல்லூரி வாழ்வு முடிந்ததும் அவர்கள் அவற்றை மீண்டும் பள்ளிகள் தோறும் உயிர்ப்பிக்கப் பாடுபடுவதையும் அவதானிக்-கின்றோம்.

மேலதிக வாசிப்பிற்காக :

((الجامع في المولد- (٤ / ٥ )) \ المؤلف : مجموعة من المؤلفين என்ற நூலைப் பார்க்கவும்.

இந்த புர்தாவின் சம்பவத்தின் சுருக்கம் இதுதான். இதனை எகிப்தில் இருந்து சூ.ஃபிகள் எனப்படுவோரின் கருத்தால் கவரப்பட்ட மார்க்கத்தில் தெளிவில்லாத ஒரு பிரிவினர் இலங்கை, இந்தியா, மலேசியா, இந்தோனேசியா... போன்ற நாடுகளில் இறக்குமதி செய்து தமது வருமானத்தைப் பெருக்கிக் கொள்கின்றனர். எனவே இதில் காணப்படும் மார்க்க முரண்பாடுகள், இணைவைப்புக்கள் பற்றிய அறிவு நம்மிடம் கட்டாயம் இருக்க வேண்டும்.

(தழுவல் : ((الجامع في المولد- (٤ / ٥ )) \ المؤلف : مجموعة من المؤلفين

# கனவு தொடர்பான மார்க்கத் தெளிவு

1) நபிமார்களின் கனவு வஹி என்பதில் மாற்றுக் கருத்தில்லை. இவரது கனவு, அதுவும் மார்க்க அறிவில்லாத ஒரு கவிஞனின் கனவு மார்க்கமாகுமா? என்ற கேள்வி இங்கு நியாயமானதாகும்.

2) மார்க்க சட்டம் என்பது குர்ஆன், ஹதீஸில் இருந்து பெறப்படுபவையாக இருக்க வேண்டுமே தவிர கனவுகளைக் கொண்டு நிலைப்படுத்தப்படக் கூடாது.

3) மார்க்கம் தொடர்பான விடயங்கள் ஒரு மனிதனின் கனவின் மூலம் நிலைப்படுத்தும் நிலை இருக்குமாயின் அது நபி ﷺ அவர்கள் உயிருடன் அங்கீகரித்த ஒன்றாக இருக்க வேண்டுமே தவிர காலத்துக் காலம் விரும்பியவர்களில் கனவில் தோன்றி தீர்ப்பளிப்பதாக இருக்கவே முடியாது.

4) கனவு, கஷ்ஃபு, இல்ஹாம் போன்ற கோட்பாடுகளால் மார்க்கத்தை நிலைப்படுத்துவது என்பது ஷீஆக்கள், சூபிகளின் வழிமுறையே அன்றி. அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்களின் வழிமுறை அல்ல.

5) அகீதா தொடர்பான அம்சங்களில் خبر الآحاد அதாவது ஒருவர் வழியாக அறிவிக்கப்படுகின்ற ஸஹீஹான ஹதீஸ்களையே நிராகரிக்கின்ற சூஃபிகள், அவ்லியா வணங்கிகள், மத்ஹபுவாதிகள் என்போரின் வழியில் இலங்கை புர்தாப் பேரவை அறிஞர்களும் இடம் பெறுகின்றனர்.

எனவே ஒருவனின் கனவைக் கொண்டு அவன் பாடிய ஷிர்கான அரபிப் பாடல்களை பரகத் வேண்டியும், நோய் நிவாரணம் வேண்டியும் பாடுவதும் முரண்பாட்டின் மொத்த வடிவமாகும்.

6) தனது மரணத்தின் பின்னால் எழுகின்ற மார்க்கப் பிரச்சினைகளுக்கு கனவின் மூலம் தீர்வைத் தேடுங்கள் என்று அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் பணிக்கவில்லை.

மாற்றமாக, குர்ஆனை விட்டுச் செல்கின்றேன். அதில் நேர்வழியும், பிரகாசமும் உள்ளடங்கி உள்ளது. அதைப் பற்றிக் கொள்ளுங்கள் என்றுதான் போதித்தார்கள்.

7) நபி ﷺ அவர்களைக் கனவில் காணலாமா? என்ற மற்றொரு சர்ச்சை இமாம்கள் மத்தியில் இருந்து கொண்டிருக்கின்ற நிலையில் கருத்து முரண்பாடான ஒன்றின் மீதும் நிறுவப்பட்ட இவ்வாறான பாடல்கள் மார்க்கமாக போதிக்கப்படுவது அங்கீகரிக்க முடியாத-தாகும்.

இப்படிப் பல முரண்பாடுகள் இதில் உள்ளடங்கி இருக்கின்ற நிலையில் ஹிஜ்ரி ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பின்னர் வந்த ஒருவனின் கனவுப் பாடல்கள் நமக்கு எவ்வகையிலும் தேவை அற்றது என்ற தீர்க்கமான முடிவுக்கு வருவதை விடுத்து அதில் பரகத் இருக்கின்றது என்று நம்பி பாடுவது எவ்வளவு பெரும் பாவம் என்று சிந்திக்க வேண்டும். (அல்லாஹ்வே மிகவும் அறிந்தவன்).

# புர்தாவுக்குள் காலடி வைக்கும் முன்னர்

இஸ்லாமிய உம்மத்தில் பொதுவாக ஒருவர் மு.ஃ.பஸ்ஸிர், (குர்ஆன் விரிவுரையாளர்) முஹத்திஸ், (ஹதீஸ்கலை வல்லுனர்), ஃ.பகீஹ், (சட்ட மேதை) காரி, (குர்ஆனிய கலையில் தேர்ச் பெற்றவர், ஹாபிழ், (ஹதீஸ் திறணாய்வுக் கலை அறிஞர்) என்றெல்லாம் அவரது மார்க்க அறிவின் தராதரத்திற்கு அமைவாக அறியப்பட்டவராக இருப்பார். அவரது அறிவிப்புக்-களுக்கும், மார்க்க விளக்கங்களுக்கும் ஒரு பெறுமானம் உள்ளதாக இருக்கும்.

புர்தாவின் கவிஞன் பூசரியோ மார்க்க அறிவற்ற வெறும் ஒரு அரபுக் கவிஞர். மேற்படி தரத்தில் அறியப்பட்ட இமாம்கள் போன்று எந்தத் தராதரத்திலும் இல்லாத ஒருவன்.

இப்படிப்பட்ட ஒருவனின் கவிதைகளை அவன் பாடினானாம், பக்கவாதத்திற்கு நிவாரணி கிடைத்ததாம் என பொய்யாக அவன் சித்திரத்ததை ஆதாரமாக்கி, மார்க்கத்தில் ஆதாரமாகக் கொள்ள முடியாத, வெறும் கனவு சம்பவம் ஒன்றை வைத்து பள்ளிகள் தோறும் இந்த ஷிர்க்கை அரங்கேற்றுகின்றார்கள் என்றால் இவர்களின் மார்க்க அறிவின் தரம் எந்த நிலையில் இருக்கும் என்பதை நாம் முடிவு செய்து கொள்ளலாம்.

புர்தாவை ஓதி பரகத் வேண்டுவோரின் மார்க்க அறிவின்மை, அறிவியல் வீழ்ச்சி என்பது இங்குதான் நிரூபணமாகின்றது. ஆசிரியர் எவ்வழியோ அவ்வழியில் மாணவனும் எனும் கதையாக வாழும் இவர்களின் நிலை பரிதாபகரமானதாகும்.

## புர்தாவில் காணப்படும் இணைவைப்புக்கள்

“புர்தா” என்றால் போர்வை, மேலாடை என்று பொருள்படும். (B)பூஸரி என்ற எகிப்து நாட்டுக் கவிஞர் பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டதற்கு மருத்துவ முறையிலான சிகிச்சை செய்யாது, நபி ﷺ அவர்களைப் புகழ்ந்து பாடிய கவிதை வரிகளுக்காக அவருக்கு நிவாரணியும் நபி ﷺ அவர்கள் போர்த்தி இருந்த போர்வையும் தனக்குக் கிடைத்ததாக புர்தாவின் மகிமை பற்றி கதை அளக்கப்படுகின்றது. அது தொடர்பான விளக்கத்தை இங்கு கவனிப்போம்.

وَمَا كُنتَ تَتْلُوا۟ مِن قَبْلِهِۦ مِن كِتَٰبٍ وَلَا تَخُطُّهُۥ بِيَمِينِكَ ۖ إِذًا لَّٱرْتَابَ ٱلْمُبْطِلُونَ ﴿٤٨﴾ ﴿العنكبوت: ٤٨﴾

நபியே நீர் இதற்கு முன்னர் எந்த வேதத்தையும் ஓதுபவராகவோ, உமது வலக்கரம் கொண்டு எழுதுபராகவோ இருந்ததில்லை. அவ்வாறாயின் அசத்தியவாதிகள் (உமது போதனைகளில்) சந்தேகம் கொண்டிருப்பர். *(அல்-அன்கபூத்: 48)*

மேற்படி வசனம் எழுத்து, வாசிப்பறிவற்ற நபி ﷺ அவர்கள் பூசரியின் கவிதைகளைச் சரி செய்தார்கள் என்ற கட்டுகதையை மறுக்கின்றது.

وَمَا عَلَّمْنَٰهُ ٱلشِّعْرَ وَمَا يَنۢبَغِى لَهُۥٓ ۚ إِنْ هُوَ إِلَّا ذِكْرٌ وَقُرْءَانٌ مُّبِينٌ ﴿٦٩﴾

﴿يس: ٦٩﴾

நாம் (முஹம்மத் ஆகிய) அவருக்கு கவிதையைக் கற்றுக் கொடுக்கவுமில்லை. அது அவருக்கும் அவசியமானதும் இல்லை. இது நினைவூட்டும் வேதமும், தெளிவுபடுத்தும் குர்ஆனுமே அன்றி வேறில்லை. (யாசீன்- 69)

கவிதைக்கும் முஹம்மத் நபி ﷺ அவர்களின் வணக்க வழிபாட்டுக்கும் எவ்வித சம்மந்தமும் இல்லை என்று குர்ஆன் தெளிவாக கூறி இருந்தும் அதனைப் பள்ளிகளில் பாடி பரகத் வேண்டுவதும் அருள் பாக்கியம் கேட்பதும் இஸ்லாமிய வழிமுறையாக இருக்கவே முடியாது.

இந்த புர்தாவை மக்கள் பரகத் வேண்டி ஓதி, தமாம் செய்யும் வழக்கம் காலாவதியாகிப்போன நிலையில் அதை வலிந்து உயிர்ப்பிக்கும் ஊர்களும், பாமர மௌலவிகளும், பள்ளி நிர்வாகிகளும், விபரமற்ற முஸ்லிம் மக்களும் இன்றும் இல்லாமல் இல்லை.

இந்தப் பாடல்கள் பாடி வருவாய் தேடுவது ஒரு பக்கம் இருக்க, இதில் காணப்படும் இணைவைத்தல்கள் பற்றி அறியாது முஸ்லிம்கள் பலர் இந்தப் பாவத்தில் வீழ்ந்துள்ளனர். எனவே அது பற்றிய தெளிவும் ஒரு முஸ்லிமுக்கு அவசியமாகும்.

## அரபுப் பாடல்கள் மார்க்க ஆதாரமாகுமா?

கஷ்டமான நிலைகளில் திக்ர்கள், துஆக்கள், தொழுகைகள் என பல அமல்கள் மார்க்கத்தில் கற்றுத்தரப்பட்டிருப்பது போன்று இவ்வாறான கவிதை வரிகள் கற்றுத்தரப்படவில்லை.

வெறும் பொழுதுபோக்கிற்காக நபித்தோழர்கள் பாடல்கள் பாடுவார்கள். உற்சாகத்தை வரவழைக்க கவிதைகள் பாடுவார்கள். இஸ்லாத்தின் எதிரிகளுக்கு சில போது கவிதைகளால் மறுப்புக் கூறுவார்கள் என்பதற்காக பள்ளிகளில் கவிதைகள் பாடி மகிழ்வதால் மழை வரும், துன்பம் நீங்கும், கஷ்டம் அகன்று போகும், துயரங்கள் தொலையும் என்றெல்லாம் உளருவது முஹம்மத் நபி ﷺ அவர்களின் தெளிவான போதனைகளுக்கு நேர் முரணான நம்பிக்கையாகும்.

இங்கு புர்தாவில் ஷிர்க்குடன் தொடர்பான ஓரிரு பாடல் வரிகள் மாதிரிக்காக எடுத்தெழுதப்படுகின்றன. எனவே பரவசம் கொள்ளாது, முரண்டுபிடிக்காது படியுங்கள். சிந்தியுங்கள், திருந்துங்கள். சீர்பெறுங்கள். அதை ஓதுவதால் பரகத் அதிகரிக்கும் என குருட்டுத் தத்துவம் பேசாதீர்கள்.

## புர்தா வரிகள்

يا أكرم الخلق ما لي من ألوذ به ✿ سواك عند حلول الحادث العَمِمِ

*பொருள்:* படைப்புக்களில் சங்கையானவரே! பெரும் துன்பமான பேரழிவைத் தரும் பயங்கர நிகழ்வுகளின் போது உங்களைக் கொண்டே அன்றி நான் பாதுகாப்புத் தேடாதிருக்க எனக்கென்ன நேர்ந்தது!

*மறுப்பு:*

أَمَّن يُجِيبُ ٱلْمُضْطَرَّ إِذَا دَعَاهُ وَيَكْشِفُ ٱلسُّوٓءَ وَيَجْعَلُكُمْ خُلَفَآءَ ٱلْأَرْضِ ۗ أَءِلَٰهٌ مَّعَ ٱللَّهِ ۚ قَلِيلًا مَّا تَذَكَّرُونَ ﴿٦٢﴾ ﴿النمل: ٦٢﴾

*நிர்க்கதியான நிலையில் இருப்பவன் தன்னை அழைக்கின்ற போது அவனுக்கு பதில் அளித்து, கஷ்டத்தை அகற்றி, உங்களை பூமியின் வழித்தோன்றல்களாக ஆக்குபவன் யார்? அல்லாஹ்வுடன் வேறு கடவுளர் உண்டா? குறைவாகவே நீங்கள் சிந்திக்கின்றீர்கள்.* (அந்நம்ல்: 62) என்ற குர்ஆன் வசனத்திற்கும், இன்னும் பல அல்குர்ஆனிய வசனங்களுக்கும் இது நேர்முரணானதாகும்.

கஷ்டங்களின் போது நபி ﷺ அவர்களை அழைப்பது மார்க்கமா? அல்லது பாவமா? என்று சிந்திக்க வேண்டும். நபி ﷺ அவர்கள் இந்தப் பொய்யனின் கனவில் தோன்றி இதைத்தான் அங்கீகரித்தார்கள் என்று குறிப்பிடும் அபத்தமானது நபி ﷺ அவர்களின் 23 ஆண்டு காலப் போதனைகளை நொறுக்கும் கொள்கையாகும்.

**மற்றொரு கவிதையைப் பாருங்கள்**

فإن من جودك الدنيا وضرتها ✸ ومن علومك علم اللوح والقلم

(நபியே!) இந்த உலகும் மறுமையும் உமது கொடையில் உள்ளதாகும். லவ்ஹுல் மஹ்பூழினதும், எழுதுகோலான போனாவினதும் அறிவு உமது ஞானங்களில் இருந்துமுள்ளதாகும்.

**மறுப்பு: "லவ்ஹுல் மஹ்பூழ்"** என்றால் பாதுகாக்கப்பட்ட பலகை என்பது பொருளாகும். இதில் உலகில் நடக்கும் சகல நிகழ்வுகளையும் அல்லாஹ் ஆதியில்

பதிவு செய்து வைத்துள்ளான். இது அல்லாஹ்வின் அபரிமிதமான அறிவின் வெளிப்பாட்டால் அவன் ஏற்படுத்தியதாகும்.

நபி ﷺ அவர்கள் மி.ஃ.ராஜ் சென்றிருந்த போது **களா கத்ரைப்** பதிவு செய்யும் வானவர்களின் பேனாக்களின் சரசரவென்ற (சருகுச்) சப்தம் போன்ற சப்தத்தை தான் செவிமடுத்ததாக குறிப்பிடுகின்ற செய்தியை அவதானித்தால் அல்லாஹ்வின் எழுத்து தொடர்பான எதையும் யாராலும் அறிய முடியாது என்பதை அறிந்து கொள்ளலாம்.

பத்ர் போரில் தமது எதிரிகளான மக்கா காபிர்களை புணர்வாழ்வு அளித்துப் பயன் பெறலாம் என நபி ﷺ அவர்களும், அபூபக்கர் ஸித்தீக் رَضِيَ ٱللَّهُ عَنْهُ அவர்களும் கொண்ட விருப்பத்தினை கண்டித்து *(அல்அன்.ஃ.பால் 67) வசனத்தை அல்லாஹ் இறக்கி வைத்தான் (புகாரி)*

இப்படி இருக்க அவர்களின் அறிவுதான் லவ்ஹுல் மஹ்பூளில் இருப்பது என்று கவிதை பாடும் இந்தக் கு.ஃ.ப்ரை எப்படி நியாயப்படுத்த முடியும் என்று சிந்திக்க வேண்டும்.

அகிலங்களின் அதிபதியாகிய அல்லாஹ்வே இந்த உலகில் அனைத்துப் படைப்புக்களையும் படைத்தான். அவன் جواد மாபெரும் கொடையாளி, العليم அல்அலீம் அனைத்தையும் அறிந்தவன் என தன்னைப் பற்றி வர்ணிக்கின்றான்.

இந்தக் கவிஞரோ அல்லாஹ்வுக்கு எதையும் மீதம் வைக்காதவாறு நபியைப் புகழ்ந்து நபியின் கொடையால்தான் அனைத்தும் என்பதாகப் புகழ்ந்து மிகப் பெரும் இணைவைப்பைச் செய்துள்ளார்.

இதற்கும் நபி ﷺ அவர்களின் அறிவு ஞானத்திற்கும் எவ்வித தொடர்புகளும் இல்லை என்பதை சிறுபிள்ளைக்கும் கூட தெரியும்.

இந்தப் பாடல்களை ஏதோ நபி ﷺ அவர்கள் பாடச் சொன்னதாக அவர்கள் மீது பொய்யுரைத்துக் கொண்டு அவைகளைத் தமாமும் செய்து, கந்தூரியும் நடாத்துவது எவ்வளவு பெரும்பாவம் என்பதை புர்தா மா.ஃ.பியா மவ்லவிகள் கொஞ்சம் சிந்திக்கக் கடமைப்-பட்டுள்ளனர்.

*கவிதை:*

كيف تدعو إلى الدنيا ضرورة من ...

لولاه لم تخرج الدنيا من العدم + والفريقين من عرب ومن عجم

இந்த உலக அவசியத்தின் பக்கம் நீ எவ்வாறு அழைக்க முடியும். (முஹம்மதாகிய) அவர் இல்லை என்றால் இந்த உலகம் இல்லாமையில் இருந்து உற்படுத்தியாகி இருக்காது. இன்னும் அரபிகள், அரபி அல்லாதோர் என்ற இருவகை மனித மானுடமும் பிறந்திருக்காது.

*மறுப்பு:* நபி ﷺ அவர்கள் இல்லை என்றால் உலகம் படைக்கப்பட்டிருக்காது என்ற பொய்யான ஒரு செய்தியின் அடிப்படையில் இந்தப் பாடல்கள் பாடப்பட்டுள்ளன.

أول ما خلق الله نور نبيك يا جابر

ஜாபிரே! அல்லாஹ் முதலாவது படைத்தது உமது நபியின் பிரகாசத்தைத்தான் என்பதுதான் அந்தப் பொய். இதற்கு எந்த அறிவிப்பாளர் வரிசையும் இல்லை. நபி ﷺ அவர்கள் இப்படி ஒரு செய்தி சொன்னார்கள் என்ற ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு ஆதாரமும் கிடையாது.

நபி ﷺ அவர்கள் மீது புனைந்துரைக்கப்பட்ட பொய்யான ஒரு செய்தியை அடிப்படையாகக் கொண்டு இந்தப் பாடல் அமைந்துள்ளது. இல்லாத ஒன்றை நபி ﷺ அவர்கள் மீது பொய்யாகக் கூறி, அதில் தமது நம்பிக்கையைக் கட்டியெழுப்புவது மார்க்கம் தடை செய்ததாகும்.

*கவிதை:*

لا طيب يعدل تربا ضم أعظمه ... طوبى لمنتشق منه وملتثم

அல்லாஹ்வின் தூதராகிய அவரின் எலும்புகளை (உடலை) அரவணைத்து வைத்துள்ள வாசனை மண்ணுக்கு உலகில் எந்த மண்ணும் ஈடாகாது. அதில் இருந்து நுகர்வோருக்கும், முத்தம் கொடுப்போருக்கும் சுபசோபனம் உண்டாகட்டுமாக!

***மறுப்பு:*** நபிமார்களின் புனித உடல்களை மண்ணரிக்காது என்ற இஸ்லாமிய நம்பிக்கைக்கு மாற்றமாக நபி ﷺ அவர்களின் புனித உடல் அழியும், அவர்களின் எலும்புகள் மாத்திரம் மீதமிருக்கும் என்பன போன்ற தவறான தோற்றப்பாடுகள் இந்தக் கவிதைகளில் காணப்படுவதை அவதானிக்க முடிகின்றது.

***ஹஜருல் அஸ்வத்*** கல்லை முத்திமிடத் தயாரான கலீ∴பா உமர் رَضِيَ اللَّهُ عَنْهُ அவர்கள் நீ ஒரு கல் என்பதை நான் அறிவேன். அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் நபி ﷺ அவர்கள் உன்னை முத்திமிட நான் கண்டிருக்கவில்லையானால் உன்னை நானும் முத்தமிட்-டிருக்கமாட்டேன் எனக் கூறினார்கள். *(முஸ்லிம்)*

நபி ﷺ அவர்களின் மதீனா மஸ்ஜிதின் சிறப்புத் தொடர்பாக வரும் செய்தியில்

عَنْ عَبْدِ اللهِ بْنِ زَيْدٍ الْمَازِنِيِّ ، رَضِيَ اللهُ عَنْهُ ، أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ : مَا بَيْنَ بَيْتِي وَمِنْبَرِي رَوْضَةٌ مِنْ رِيَاضِ الْجَنَّةِ. (صحيح البخاري \ ١١٩٥).

எனது வீட்டுக்கும், எனது மிம்பருக்கும் மத்தியில் சுவனுத்துப் பூங்காக்களில் ஒரு பூங்கா உண்டு என்று நபி ﷺ அவர்கள் கூறியதாக இடம் பெற்றுள்ளது. *(புகாரி)*

இந்த ஹதீஸில் நபி ﷺ அவர்களின் அடக்கத்தலம், அதன் மண்ணின் சிறப்புக்கள் பற்றிய எந்தவிதமான வழிகாட்டலும் குறிப்பிடப்படவில்லை என்பது கவனிக்கத்தக்கதாகும்.

பூமியில் சிறந்த மண் கர்பலா மண் என ஷீஆக்கள் போதிக்கும் கோட்பாட்டுக்கும் நபியின் மண்ணறை மண்ணின் புனிதம் பேசும் பூசரியின் சூபிஸ தத்துவத்துக்கும் இடையில் வித்தியாசம் ஏதும் இல்லை.

மொத்தத்ததில் சுவனத்து மண்ணை விட நபி ﷺ அவர்களின் மண்ணறை மண்ணை இங்கு சிறப்பித்துக் கூற வருகின்றார். அதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை.

இப்படி இருக்க பூசரி என்ற கவிஞனின் இந்தக் கூற்று சரியானதா? என்று நீங்கள் சிந்தனை செய்ய வேண்டும்.

இதைத்தான் அவர் காலை, மாலையில் ஓதப்படும் திக்ர், அவ்ராதுகளுக்குப் பதிலாக ஓதி வந்தாராம். நோய் நீங்கியதாம் என்றெல்லாம் கதை அளக்கின்றார்.

நபி ﷺ அவர்களின் மண்ணறையையோ, மற்றவர்களின் மண்ணறைகளையோ ஒரு முஸ்லிம் எந்தக் காரணம் கொண்டும் முத்திமிடுவது கூடாது என்பது இமாம்களின் ஏகோபித்த முடிவாகும்.

இமாம் கஸ்ஸாலி அவர்களின் இஹ்யாவில் பின்வரும் தீர்ப்பினைப் பார்க்க முடிகின்றது.

وليس من السنة أن يمس الجدار ولا أن يقبله [إحياء علوم الدين - ١\ / ٢٥٩)

நபி ﷺ அவர்கள் அடங்கப்பட்டுள்ள மண்ணறைச் சுவரைத் தொடுவதோ, அதை முத்தமிடுவதோ (சுன்னா) அவர்களின் வழியில் உள்ளது அல்ல. (இஹ்யா) மற்றொரு இடத்தில்:

والمستحب في زيارة القبور أن يقف مستدبر القبلة مستقبلا بوجهه الميت وأن يسلم ولا يمسح القبر ولا يمسه ولا يقبله فإن ذلك من عادة النصارى

(إحياء علوم الدين - جزء ٤ - صفحة ٤٩١)

நபி ﷺ அவர்களின் மண்ணறையை ஸியாரத் செய்கின்ற போது (ஸியாரத் செய்பவர்) கிப்லாத் திசையை தனக்குப் பின்பக்கமாக ஆக்கி தனது முகத்தை மய்யித்தின் பக்கமாக முன்னோக்கி ஸலாம் சொல்லுவார். “கப்ரைத் தொடுவதும், அதை முத்தமிடுதும் கிரிஸ்தவ, மற்றும் யூத மக்களின் பண்பாடாகும் *(இஹ்யா, பாகம்: 4. பக்கம்: 491)*

இது போன்ற கருத்தினை இஹ்யாவில் இன்னும் சில இடங்களில் உறுதி செய்திருப்பதைக் கவனத்தில் கொள்ளவும்.

நபி ﷺ அவர்களின் மஸ்ஜிதுன் நபவி தொடர்பாக பல சிறப்புக்கள் வந்திருப்பது போன்று அதில் தொழுவதன் சிறப்புக்களும் வந்திருக்கின்றது. ஆனால், அவர்களின் மண்ணறையின் மண்ணின் சிறப்புக்கள் பற்றி வந்த ஏற்றுக்கொள்ளத்தக்க எந்த ஆதாரமும் இஸ்லாத்தில் இல்லை. இந்த கவிஞனின் உளரல்களைத் தவிர.

***கவிதை:***

لن يضيق رسول الله جاهك بي ۞ إذا الكريم تجلى باسم منتقم

அல்லாஹ்வின் தூதரே! பழிக்குப்பழி வாங்கும் சங்கைமிக்கவன் (தீர்ப்பளிக்க) வந்தால் அவனது

கோபத்தில் இருந்து உங்கள் கண்ணியத்தால் என்னைக் காப்பது உங்களுக்கு கஷ்டமாகாது.

அதாவது அல்லாஹ்வின் கோபத்தில் இருந்து பாவியான தன்னைக் காக்க சிலைகள், நல்லடியார்கள் பொருட்டை வேண்டிய மக்கா காபிர்கள் போன்று நபி ﷺ அவர்களின் கண்ணியத்தின் பொருட்டை வேண்டுகின்றார் கவிஞர்.

நபி ﷺ அவர்களின் சிபாரிசு என்பது மறுமையில் அல்லாஹ் அவர்களுக்கு அனுமதி அளித்த பின்னர் நடைபெறும் மறுமை நாள் தொடர்பான நிகழ்வாகும். அதனை புர்தா ஆசிரியர் இந்த உலகத்தில் வேண்டி இருப்பது எவ்வளவு பெரும் இணைவைத்தல் என்பதை நாம் சிந்திக்க வேண்டும்.

நபித்தோழர்கள் இவ்வாறு நபியின் மண்ணறையில் நின்று கொண்டு எப்போதாவது பிரார்த்தனை செய்ததாக ஆதாரபூர்வமான செய்திகள் இருக்கின்றதா? என்று தேடிப்பார்த்தால் பொய்யான செய்திகள் இடம் பெற்றிருக்கின்றன என்பதை அறிய முடிகின்றது.

முஹம்மத நபி ﷺ அவர்களுக்கு நபித்துவம் வழங்கப்பட்ட பின்னால் மக்கா ஸ.ஃபா மலை மீதேறி தனது அருமை மகள், சுவனத்தின் தலைவி பாத்திமா رَضِيَ ٱللَّهُ عَنْهَا அவர்கள் உட்பட தமது நெருங்கிய உறவினர்கள் அனைவருக்கும் கூறிய போதனைகள் இவ்வாறான இணைவைத்தல்களை முழுமையாக மறுத்துரைப்பதைப் பார்க்கின்றோம்.

يَا فَاطِمَةَ بِنْتَ مُحَمَّدٍ يَا صَفِيَّةُ بِنْتَ عَبْدِ الْمُطَّلِبِ يَا بَنِى عَبْدِ الْمُطَّلِبِ لاَ أَمْلِكُ لَكُمْ مِنَ اللهِ شَيْئًا سَلُونِى مِنْ مَالِى مَا شِئْتُمْ. (صحيح مسلم \ ١٣ )

முஹம்மதின் மகள் பாத்திமாவே! அப்துல் முத்தலிபின் மகள் ஸ.ஃ.பிய்யாவே, அப்துல் முத்தலிப் கோத்திரமே! உங்களை அல்லாஹ்வின் தண்டனையில் இருந்து (காத்திட) நான் எதையும் என்னிடம் உரிமையாக்கி கொள்ளவில்லை. எனவே நரகில் இருந்து உங்களை நீங்களே பாதுகாத்துக் கொள்ளுங்கள் எனக் கூறினார்கள். *(முஸ்லிம்)*

நபியின் சொந்த மகள், குடும்பங்கள் அனைவரும் அவர்களை நம்பிக்கை கொண்டது போன்று நல்லமல்கள் செய்து தம்மை நரகத்தில் இருந்து காத்துக் கொள்ள வேண்டும் என நபி ﷺ பணித்துள்ளார்கள் என்றால் அவர்களின் பொருட்டால் வேண்டுதல் என்பதை எந்தவகையில் நியாயப்படுத்த முடியும்?

நபி ﷺ அவர்களின் காலத்தில் அவர்களை அல்லாஹ் என்ற சொல்லுடன் சொல்லால் இணைத்துப் பேசியதைக் கூட கண்டித்துள்ளார்கள் என்பதை பின்வரும் நபி மொழி மூலம் அறிந்து கொள்ளலாம்.

عَنْ عَدِىِّ بْنِ حَاتِمٍ أَنَّ رَجُلاً خَطَبَ عِنْدَ النَّبِىِّ -ﷺ- فَقَالَ مَنْ يُطِعِ اللَّهَ وَرَسُولَهُ فَقَدْ رَشِدَ وَمَنْ يَعْصِهِمَا فَقَدْ غَوَى. فَقَالَ رَسُولُ اللهِ -ﷺ- « بِئْسَ الْخَطِيبُ أَنْتَ. قُلْ وَمَنْ يَعْصِ اللَّهَ وَرَسُولَهُ ».

(صحيح مسلم ٢٠٤٧)

நபி ﷺ அவர்களின் காலத்தில் ஒரு மனிதர் குத்பா உரை நிகழ்த்திக் கொண்டிருந்தார். அவர், தனது உரையில் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் வழிப்பட்டவர் நேர்வழி நடந்தவர், *"யார் அவ்விருவருக்கும் மாறு செய்கின்றாரோ அவர் வழிதவறிவிட்டார்"* எனக் கூறினார். இதனை அதவானித்த நபி ﷺ அவர்கள் (கதீப்களில்) பேச்சாளர்களில் நீதான் கெட்டவர். (அவ்விருவருக்கும் மாறு செய்தவர் என இணைத்துக் கூறாமல்) அல்லாஹ்வுக்கும், பின்னர் அவனது தூதருக்கும் என்று (பிரித்துக்) கூறு எனக் கூறினார்கள். *(முஸ்லிம்)*

இப்படி அல்லாஹ்வுடன் தன்னைச் சமப்படுத்திய-வர்களிடம் காணப்பட்ட சாதாரண வார்த்தைப் பிரயோகங்களில் கூட திருத்தம் செய்து மிகவும் சரியானதின் பக்கம் வழிகாட்டிச் சென்ற அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் இவ்வாறான இணை-வைப்புக்களை தமது மரணத்தின் பின்னால் பொருந்திக் கொள்வார்களா? என மௌலித், மற்றும் புர்தா பாடுவோர் சிந்திக்கக் கடமைப்பட்டுள்ளனர்.

*கவிதை:*

فإن لي ذمّة منه بتسميتي محمداً ✦ وهو أوفى الخلق بالذمم

நான் முஹம்மத் என்று பெயர் வைத்துக் கொண்டதனால் அவருக்கு (என்னைக் காக்கும்) ஒரு

பொறுப்புண்டு. அவர்தான் பொறுப்புக்களை நிறை-வேற்றுவதில் படைப்புக்களில் அதி சிறந்த காப்பாளராச்சே!

முஹம்மத் என்று இந்தக் கவிஞர் பெயர்வைத்துக் கொண்டதனால் முஹம்மத் நபி ﷺ தன்னைக் காப்பார் என்று நம்பும் மடத்தனத்தை விட இந்த உலகில் வேறு ஒரு மடத்தனமும் இருக்க முடியாது. முஹம்மத் என்ற பெயர் வைத்த எத்தனைபேர் இதுவரை சுவனத்தைக் கொண்டு நன்மாராயம் பெற்றனர் என்று சிந்தித்தோமா?

முஹம்மத் என்ற சிறப்பான பெயருக்குரிய அல்லாஹ்வின் தூதருக்கும் மறுமையில் அல்லாஹ்விடம் கேள்விகள் உண்டு என குர்ஆன் குறிபிடுகின்றது. எனவே நாமே நம்மை நல்லமல்கள் மூலம் தற்காத்துக்கொள்ள வேண்டும்.

وَمَنْ بَطَّأَ بِهِ عَمَلُهُ لَمْ يُسْرِعْ بِهِ نَسَبُهُ (صحيح مسلم\٧٠٢٨ )

யாரின் (நல்ல) செயல் அவரைத் தாமதப்படுத்தி விட்டதோ அவரது (உயர்) பரம்பரை என்பது (சுவனத்திற்கு) அவரை அவசரப்படுத்தாது என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். *(முஸ்லிம்)*

### கவிதை

ما سامَني الدهرُ ضَيمًا واستجرتُ به   إلَّا ونِلتُ جوارًا منه لم يُضَم

ولا الْتمستُ غِنَى الدَّارينِ مِن يَدِه   إلَّا التمستُ النَّدى مِن خَيرِ مُسْتَلِمِ

பொருள்: காலத்தால் நான் அநீதிக்குள்ளாகின்ற போது அந்த மாநபியின் அருகாமையில் பாதுகாவல் வேண்டி ஒதுங்குவேன். அப்போது அவரிடம் இருந்து எனக்கு மனம் நிறைந்த நெருக்கமும் அரவணைப்பும் கிடைத்து விடும். அவர் கையில் இருக்கும் ஈருலகின் செல்வத்தை கேட்கின்ற போது பனித்துளியாவது பெற்று நற்பாக்கியம் வேண்டியோரில் நான் சிறந்தவராகிடுவேன்.

காலத்தை திட்டும் இவர், அல்லாஹ்வின் தூதரிடம் தனது கஷ்டத்திற்காகப் பாதுகாப்பும் வேண்டுவாராம். அதனால் அவருக்கு பாதுகாப்பும் கிடைப்பதாகவும் புலம்புகின்றார்.

இவர், தனக்குரிய ஈருலக செல்வக் கொடைகளை மிகப்பெரும் செல்வந்தனாகிய அல்லாஹ்வின் அருள் கொடைகளிலிருந்து கேட்காமல் மரணித்த அல்லாஹ்வின் தூதரிடம் வேண்டுவாராம்.

இதில் எம்மாத்திரம் இணைவைப்புக்கள் காண்படுகின்றன என்று சிந்தனை செய்து பாருங்கள். இதை ஓதுகின்ற போது அல்லாஹ்வின் உதவி கிடைக்காது என்பது உறுதி! ஆனால் அல்லாஹ்வின் தண்டனை கிடைத்துவிடுமோ என்று ஒரு முஃமின் அச்சப்பட வேண்டும்.

*கவிதை:*

إن لم يكن في معادي آخذا بيدي ... فضلا وإلا فقل يا زلة القدم

அல்லாஹ்வின் தூதரே! மறுமையில் நீங்கள் எனது கரம்பற்றி அல்லாஹ்வின் தண்டனையில் இருந்து

உங்கள் தயவால் என்னை நீங்கள் காப்பாற்ற வில்லையானால் அந்தோ என் பரிதாபம் ! சறுக்கி விட்ட பாதமே என்று கூறிக் கொள்வதைத் தவிர வேறுவழியில்லை.

அதாவது அல்லாஹ்வின் தண்டனையில் இருந்து என்னை நீங்கள் காப்பாற்றாது விட்டு விட்டால் நான் பாதம் சறுகி நரகம் போய்விட்டேன் என்பது பொருளாகும்.

*கவிதை:*

فاق النبيين في خَلْقٍ وفي خُلُقٍ ولم يدانوه في علم ولا كرم

அவர் (முஹம்மத் ﷺ), படைப்பிலும் பண்பிலும் அனைத்து நபிமார்களையும் மேலோங்கினார். அறிவிலோ கொடையிலோ அவரை அவர்கள் நெருங்கவில்லை. என்ற வரிக்குப் பின்னால்

وكلهم من رسول الله ملتمس غرفاً من البحر أو رشفاً من الديم

அவர்கள் அனைவரும் அல்லாஹ்வின் தூதரிடம் (அறிவுச்) சமுத்திரத்தில் இருந்து சிறங்கை (அள்) அளவு, அல்லது அமைதியான தொடர் மழையில் இருந்து ஒரு சொட்டு நீரை இரு உதடுகளாலும் உறிஞ்சிடும் அளவு எடுத்துள்ளனர்.

இந்தக் கவிதைகளை நீங்கள் நன்றாக ஆராய்ந்தால் மனித படைப்பின் மூலக்கூறு என்பது நபி ﷺ

அவர்களின் பிரகாசமாகும் என்ற சூபிகளின் மௌட்டீக நம்பிக்கை காணப்படுவதை அவதானிக்க முடியும்.

அத்தோடு, மனித இனத்தின் தொடக்கம் நபி ஆதம் عَلَيْهِ ٱلسَّلَامُ அவர்கள் என்பதையும், மற்ற மனித சமூகம் விந்துத்துளியினால் படைக்கப்படுவதையும் மறுக்கின்றது.

அது மாத்திரமின்றி, நபிமார்களின் அறிவில் குறை காணும் ஒரு நிலையும் இங்கு அவதானிக்க முடிகின்றது. இது குர்ஆன், மற்றும் ஹதீஸுக்கு மாற்றமான வரிகள் என்பதில் சந்தேகமில்லை.

மூஸா நபி عَلَيْهِ ٱلسَّلَامُ அவர்கள் தொடர்பான ஒரு நிகழ்வின் போது நபி صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ அவர்கள் இவ்வாறு உபதேசித்தார்கள்.

لاَ تُخَيِّرُونِي عَلَى مُوسَى فَإِنَّ النَّاسَ يَصْعَقُونَ يَوْمَ الْقِيَامَةِ فَأَصْعَقُ مَعَهُمْ فَأَكُونُ أَوَّلَ مَنْ يُفِيقُ فَإِذَا مُوسَى بَاطِشٌ جَانِبَ الْعَرْشِ فَلاَ أَدْرِي أَكَانَ فِيمَنْ صَعِقَ فَأَفَاقَ قَبْلِي ، أَوْ كَانَ مِمَّنِ اسْتَثْنَى اللهُ. (صحيح البخاري\ ٢٤١١)

மூஸாவை விட என்னை நீங்கள் (இந்த விஷயத்தில்) சிறப்பித்துக் கூறாதீர்கள். மறுமை நாளில் மனிதர்கள் எல்லோரும் மூச்சை ஆகுவார்கள். நானும் அவர்களோடு மூச்சை ஆகுவேன். மயக்கம் தெளிவோரில் நான் முலாவது மனிதராக இருப்பேன். மூச்சுத் தெளிந்ததும் நான் மூஸா அலை அவர்களைப் பார்ப்பேன். அவர்கள் அர்ஷின் ஒரு ஓரத்தைப் பிடித்தவராக நின்று கொண்டிருப்பார்கள். எனக்கு முன்னால் அவர்கள் மூச்சுத் தெளிந்தார்களா? அல்லது அல்லாஹ்

விதிலக்கத்தவர்களில் ஒருவராக அவர்கள் ஆகினார்களா? என்பது பற்றி நான் அறியேன் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். *(புகாரி)*

முஸ்லிமின் அறிவிப்பில்: தூர்சினாய் மலையடிவாரத்தில் மூஸா عَلَيْهِ ٱلسَّلَامُ அவர்கள் மயக்க முற்றதால் இங்கு விதிவிலக்களிக்கப்பட்டார்களா? என்பது பற்றி நான் அறியேன் என்று கூறியதாக இடம் பெற்றுள்ளது.

## மார்க்கத்தில் எல்லை மீறுவது பாவமாகும்

இப்படிப் பல முரண்பாடுகள் இருக்கின்ற நிலையில் மார்க்கத்தில் எல்லை மீறுவதும் பாவமாகும். அதுவும் இந்தக் கவிதைகளில் இடம் பெற்றுள்ளதைப் பார்க்கின்றோம்.

يَٰٓأَهۡلَ ٱلۡكِتَٰبِ لَا تَغۡلُواْ فِي دِينِكُمۡ .....﴿١٧١﴾ ﴿النساء: ١٧١﴾

*வேதம் வழங்கப்பட்டோரே நீங்கள் உங்கள் மார்க்கத்தில் எல்லை மீறாதீர்கள். (அந்நிஸா: 171)*

لا تُطْرُونِي كَمَا أَطْرَتِ النَّصَارَى ابْنَ مَرْيَمَ وَإِنَّمَا أَنَا عَبْدُهُ فَقُولُوا عَبْدُ اللهِ وَرَسُولُهُ). (رواه البخاري)

மர்யமின் மகன் ஈஸாவை கிரஸ்தவர்கள் எல்லை மீறிப் புகழ்ந்தது போன்று, என்னை நீங்கள் எல்லை மீறிப் புகழாதீர்கள். நான் அவனது ஒரு அடியானே. எனவே நீங்கள் அல்லாஹ்வின் அடிமையும், அவனது தூதரும் என்றே கூறுங்கள். *(புகாரி)*

நபி ﷺ அவர்களின் இந்தக் கட்டளை பேச்சுக்கள், எழுத்துக்கள் அனைத்திலும் மீறப்படும் நிலைகளைப் பொதுப்படையாக குறிப்பிதாக இருந்தாலும் மவ்லித் மற்றும் புர்தாப் பாடல் வரிகளில் காணப்படும் மார்க்கத்தின் வரையறைகளை மீறிய பாடல்கள் சிலவற்றை மாத்திரம் இங்கு அடையாளப்படுத்தி தரப்பட்டுள்ளது.

அவை குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் எவ்வளவு முரண்பட்டதாக இருக்கின்றன என்பது பற்றி தெளிவுபடுத்திய பின்னால் தீர்மானிப்பது உங்களிடம் விடப்பட்டுள்ளது. அல்லாஹ்வே மார்க்கத்தில் விளக்கத்தை அளிக்கப் போதுமானவன்.

## புர்தா பாடல்கள், மகான்கள் பேரில் கந்தூரி நடாத்தலாமா?

உலகில் மனிதன் பிறக்கின்றான், அவன் எல்லா விதாமன சேட்டைகளையும் செய்கின்றான், பின் மனிதர்களுக்கு ஏற்படும் எல்லாவிதமான நோய்களும் இவனுக்கும் ஏற்படுகின்றது, அதற்காக அவனுக்கு சிகிச்சையும் அளிக்கப்படுகின்றது, பின்னர் எல்லோ-ரையும் போல் என்றோ ஒரு நாள் அவனையும் மரணம் பிடித்துக் கொள்கின்றது, பின்னர் எல்லா மனிதர்களைப் போல அவனும் பூமிக்குள் மனிதர்களின் கரங்களா-லையே புதைக்கப்படுகின்றான்.

இவன் அடக்கம் செய்யப்பட்டு சில காலம் கழிந்த பின்னர், இவன் உலகில் செய்த அநியாயங்களும், அவனது பலவீனங்களும் மறைக்கப்பட்டு, மனிதன்

என்ற நாமமே அவனிலிருந்து மறக்கடிக்கப்பட்டு, கடவுள் நிலைக்கு அவன் உயர்த்தப்படும் நிலை பிற மதங்களில் காணப்படுகின்றது.

இஸ்லாமிய அடிப்படைகளில் தெளிவற்ற பிரதே-சங்களில் சடங்கு சம்பிரதாயங்களுக்கும் இணை-வைப்பிற்கும் முன்னுரிமை வழங்கும் அரபுக்-கல்லூரிகளில் படித்து பட்டம் பெறும் மவ்லிகள் இஸ்லாம் பற்றி அறியாத பாமர முஸ்லிம்கள் பலரை செத்தும் பிழைத்தும் கொண்டிருக்கும் அருகிப் போகும் இவ்வாறான நடைமுறைகள் மூலம் வலிந்து வழிகெடுக்கின்றனர்.

தம்மோடு வாழ்ந்து மரணித்த ஒரு மனிதனிடம் தெய்வீகத்தன்மை இருப்பதாக எண்ணி அவனிடம் தமது தேவைகளையும் கோரிக்கைகளையும் முன்னிலைப்படுத்த வேண்டுவதையும், அவர் பேரில் நேர்ச்சைகள் பல செய்வதையும், அம்மனிதன் பேரில் விழாக்கள் கொண்டாடி, கந்தூரி நடாத்துவதையும் இப்போதும் அவதானிக்கின்றோம்.

இது இலங்கை போன்ற நாட்டில் அருகிச் செல்லும் மூட நம்பிக்கைகளில் ஒன்றாக இருந்தாலும் பெரியார்கள், மற்றும் அவ்லியாக்கள் பேரில் அறுத்துப் பலியிடுவதை இஸ்லாமிய மார்க்கம் அங்கீகரிக்க-வில்லை. மட்டுமின்றி, அதனைப் பெரும் பாவமாகவும் நோக்குகின்றது.

இதனை ஷா.ஃ.பி மத்ஹபும் அங்கீகரிக்காத நிலையில் அதைச் சார்ந்தோரே தூக்கிப்பிடித்து அரங்கேற்று-கின்றனர்.

இமாம் ஷா.்.பிஈ رَحِمَهُ ٱللَّهُ அவர்களின் மத்ஹபு சார்ந்த இமாம்களில் ஒருவரான இமாம் நவவி رَحِمَهُ ٱللَّهُ அவர்களின் தீர்ப்பை உங்கள் கவத்திற்கு கொண்டுவருவது பொருத்தமென காண்கின்றோம்.

இமாம் முஸ்லிம் رَحِمَهُ ٱللَّهُ அவர்களின் கிரந்தத்தில் இடம்பெறும் ஒரு ஹதீஸில் நான்கு வகையான அல்லாஹ்வின் சாபங்கள் கூறப்பட்டடுள்ளன. அவற்றில் ஒன்று

لَعَنَ اللهُ مَنْ ذَبَحَ لِغَيْرِ اللهِ (صحيح مسلم\ ٥٢٣٩)

***"அல்லாஹ் அல்லாதோருக்காக அறுத்துப் பலியிடுபவனை அல்லாஹ் சபிப்பானாக"! என நபி*** صَلَّى ٱللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ ***அவர்கள் கூறிய செய்தியாகும்.*** (முஸ்லிம்)

இதற்கு விளக்கமளிக்கும் ஷா.்.பி மத்ஹபின் பிரபல அறிஞர்களில் ஒருவரான இமாம் நவவி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள்:

وَأَمَّا الذَّبْح لِغَيْرِ الله فَالْمُرَاد بِهِ أَنْ يَذْبَح بِاسْمِ غَيْر الله تَعَالَى كَمَنْ ذَبَحَ لِلصَّنَمِ أَوْ الصَّلِيب أَوْ لِمُوسَى أَوْ لِعِيسَى صَلَّى الله عَلَيْهِمَا أَوْ لِلْكَعْبَةِ وَنَحْو ذَلِكَ ، فَكُلّ هَذَا حَرَام ، وَلَا تَحِلّ هَذِهِ الذَّبِيحَة ، سَوَاء كَانَ الذَّابِح مُسْلِمًا أَوْ نَصْرَانِيًّا أَوْ يَهُودِيًّا ، نَصَّ عَلَيْهِ الشَّافِعِيّ ، وَاتَّفَقَ عَلَيْهِ أَصْحَابنَا ، فَإِنْ قَصَدَ مَعَ ذَلِكَ تَعْظِيم الْمَذْبُوح لَهُ غَيْر الله تَعَالَى وَالْعِبَادَة لَهُ كَانَ ذَلِكَ كُفْرًا ، فَإِنْ كَانَ الذَّابِح مُسْلِمًا قَبْل ذَلِكَ صَارَ بِالذَّبْحِ مُرْتَدًّا .

(شرح النووي على مسلم – ج ٦ / ص ٤٧٥)

“அல்லாஹ் அல்லாதோருக்காக அறுத்தல் என்பதன் நோக்கம் என்னவெனில் சிலைக்காக, அல்லது சிலுவைக்காக, அல்லது மூஸா عَلَيۡهِ ٱلسَّلَامُ, அல்லது ஈஸா عَلَيۡهِ ٱلسَّلَامُ ஆகியோருக்காக, அல்லது க.்.பாவிற்காக, அல்லது அதல்லாவற்றிற்காக அறுத்துப்பலியிடுபவன் (செயல்) போன்றதாகும்.

இவை அனைத்தும் ஹராமாகும். அறுப்பவன் முஸ்லிமாகவோ, அல்லது கிரிஸ்தவனாகவோ, அல்லது யூதனாகவோ இருந்தாலும் அந்தப் பலிப்பிராணி ஹலாலாகாது. இதையே ஷா.்.பி رَحِمَهُ ٱللَّهُ அவர்கள் உறுதியாகக் குறிப்பிட்டுள்ளார்கள். இக்கருத்திலேயே நமது தோழர்களும் ஏகோபித்த முடிவில் இருக்கின்றனர்.

அத்துடன், அல்லாஹ் அல்லாது யாருக்காக இவ்வாறு அறுக்கப்படுப்படுகின்றதோ அது அவரை கண்ணியப்படுத்துவதையும், அவருக்கு வழிப்படுவதையும் அறுத்துப் பலியிடுபவர் நோக்கமாகக் கொள்வாரானால் அது “கு.்.ப்ர்” எனும் நிராகரிப்பாகி விடும், அறுப்பவன் முஸ்லிமாக இருப்பின் அவருக்காக அறுத்த காரணத்தால் அவன் “முர்தத்” மதம் மாறியவனாக மாறிவிடுகின்றான். *(பார்க்க: ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம்: பாகம் 6 பக்கம்: 475)*

இவ்வளவு கடுமையான நிலைப்பாட்டைக் கொண்ட மத்ஹபின் தீர்ப்பை முதுகுக்குப்பின் தூக்கி எறிந்த ஆலிம்கள் என்ன மனதுடன் பெரியார்கள், மற்றும் அவ்லியாக்கள் மற்றும் புர்தா மௌலிதுகள் பேரில் இவ்வாறான அனாச்சாரங்களை அரங்கேற்றுகின்றனரோ தெரியவில்லை.

## வணக்கங்கள் அல்லாஹ்வுக்காவே அன்றி, கப்ராளிகளுக்காக அல்ல

தொழுகை, நோன்பு, சிரம்பணிதல், கட்டுப்படுதல், நேர்ச்சை செய்தல், அறுத்துப் பலியிடுதல் போன்ற அனைத்து வகையான வணக்கங்களும் அடியார்கள் அல்லஹ்வுக்கு மாத்திரம் செய்ய வேண்டிய வணக்கங்களாகும். அவற்றை அல்லாஹ் அல்லாதோ-ருக்காக கட(நட)த்துதல் என்பது மிகப் பெரும் பாவமாகும்.

இஸ்லாம் அல்லாஹ்வை மட்டும் வணங்குமாறு கட்டளையிடுகின்ற மார்க்கமாகும். அல்லாஹ்வின் அடியார்களான உயர்வான வானவர்கள், மனிதர்கள், ஜின்கள் என்போர் மாத்திரமின்றி, உலகில் காணப்படும் அவனது இதர படைப்புக்களான வானங்கள், பூமி. சூரியன், சந்திரன், இதர கோளங்கள், மற்றும் ஊர்வனங்கள், பறவைகள் என அனைத்துப் படைப்புக்களும் அவனையே வணங்கி வழிபட வேண்டும் என்பது அவனது பிரத்தியேக வழிகாட்டலும், கட்டளையுமாகும்.

இப்படி இருக்க அல்லாஹ்வின் அடியார்களை அல்லாஹ்வின் நிலையில் வைத்து

❁ கால்நடைகள் அறுத்து, சமைத்து, அவர்கள் பேரில் நேர்ச்சைகள் நிறைவேற்றுவது,

❁ அல்லாஹ்வின் படைப்புக்களான கோழி, ஆடு, மாடு, ஒட்டகைகள் போன்ற உயிர்ப் பிராணிகளை அவர்களின் பெயரால் பலியிடுவது,

❁ மரணித்தவர்கள் பேரில் புர்தா, ராதிபு போன்ற பாடல்கள் பாடி அவர்களின் பரகத்துக்களை வேண்டி அன்னதாம் என்ற பெயரில் உணவுகள் வழங்குவது போன்ற வணக்க வழிபாடுகள் மார்க்கத்தில் தடை செய்யப்பட்டதாகவே இருக்க வேண்டும் என்பது சாதாரண அறிவுடையோரும் தெரிந்து வைத்துள்ள ஒரு விடயமாகும்.

பொதுவாக இப்படியான இணைவைத்தலின் வாடை கூட ஈமானிய சமூகத்தில் காணப்படக் கூடாது. அவைகள் துளிர்விட ஆரம்பிக்கின்ற போதே முளையிலேயே அவற்றைக் கிள்ளி எறிவது மார்க்கமாகும்.

நபி மூஸா عَلَيْهِ ٱلسَّلَامُ அவர்கள் ஸாமிரியின் கடவுளோடு நடந்து கொண்ட முறைதான் இதற்கும் பரிகாரமாகும்.

....وَٱنظُرْ إِلَىٰٓ إِلَٰهِكَ ٱلَّذِى ظَلْتَ عَلَيْهِ عَاكِفًا ۖ لَّنُحَرِّقَنَّهُۥ ثُمَّ لَنَنسِفَنَّهُۥ فِى ٱلْيَمِّ نَسْفًا ﴿٩٧﴾ إِنَّمَآ إِلَٰهُكُمُ ٱللَّهُ ٱلَّذِى لَآ إِلَٰهَ إِلَّا هُوَ ۚ وَسِعَ كُلَّ شَىْءٍ عِلْمًا ﴿٩٨﴾ ﴿طه: ٩٧ – ٩٨﴾

***(ஸாமிரியே!) நீ வழிப்பட்டு வந்த உன் கடவுளைப் பார். நிச்சமயாக நாம் அதனை எரிப்போம். பின்னர், கடலில் அதனை நிச்சமயாக முழுமையாகத் தூவி விடுவோம் எனக்கூறிய பின்னர், வணங்கி வழிபடத் தகுதியான உங்கள் இரட்சகன் அல்லாஹ் ஒருவனே! அவன் எல்லாவற்றையும் அறிவால் நன்கு சூழ்ந்துள்ளான் என்றார்.*** *(தாஹா: 97, 98)*

இங்கு ஸாமிரி தயாரித்த பனூ இஸ்ரவேலர்களின் களைமாட்டு உருவ அமைப்பிலான பொய்க் கடவுள் எரித்து, சாம்பலாக்கப்பட்டு, கடலில் கரைக்கப்பட்டது என்றால் மவ்லித்களையும் புர்தாக்களையும் நாம் காப்பதா? அல்லது எரிப்பதா என்று நபித்தோழர்களின் கொள்கை வழி வந்த நாம் சிந்திக் வேண்டும்.

ஷீஆக்களைப் போன்று அவற்றைக் கட்டிக்காக்க நினைப்பது நமது ஈமானுக்கும் நல்லமல்களுக்கும் நாம் செய்கின்ற துரோகமாகும்.

**முடிவுரை:**

நபி ﷺ அவர்களின் மரணத்தின் பின்னால் கலீ:பாக்களின் ஆட்சியில் இவ்வாறான இணை-வைப்புக்கள் இடம் பெறவில்லை. நபித்தோழர்களின் மரணத்தோடு முஸ்லிம் உலகில் பல புதுமைகள் பல வடிவங்களில் அதன் எதிரிகளால் புகுத்தப்பட்டன. அவைகள் திக்ர், துஆக்கள் போன்ற வணக்க வழிபாடுகளாக, சிந்தனைகளாக, கருத்துக்களாக, பாடல்களாக, சடங்கு சம்பிரதாயங்களாக என பல்வேறு தோற்றங்களில் உட்புகுந்தன.

நபி ﷺ அவர்களின் குடும்பத்தின் பெயருக்கு இருக்கின்ற தனியான மரியாதையைக் கவனத்தில் கொண்ட யூதர்கள் இந்த உம்மத்தை நாசப்படுத்-துவதில் ஷீஆ சிந்தனையை முதலாவதாகத் தோற்றுவித்து வெற்றியும் கண்டனர் என்பதே உண்மை.

யூதர்கள் முஸ்லிம் ஆட்சியாளர்களின் பலவீனத்தைப் பயன்படுத்தி நபி ﷺ அவர்களின் குடும்பப் பெயரில் ஷீஆ, அலவிய்யா, சூபிய்யா போன்ற பெயர்களில் இந்த மார்க்கத்தில் ஒழிந்து கொண்டு காலம் காலமாக தமது நோக்கங்களை நிறைவு செய்து கொண்டனர்.

அந்த அடிப்படையில் மவ்லித், மீலாத், புர்தாக்கள் என பல புதுமையான நிகழ்வுகளை உருவாக்கி இந்த சமுதாயத்தின் அந்தரங்கமான அமல்களில் கை-வைத்தனர்.

போதுமான மார்க்க அறிவுப் பின்னணி இல்லாத, நபித்தோழர்கள் வழி வந்த நமது முஸ்லிம் மக்கள் பாடல்களால் வழிகெடுக்கப்பட்டனர் என்பதை மவ்லித் மற்றும் புர்தா, யாகுத்பா போன்ற கவிதைப் புராணங்களில் காணப்படும் இணைவைப்புக்கள் உறுதி செய்கின்றன.

ما هذه الموالد المحدثة والبدع المنكرة ، إلا مضاهاة صريحة لشعائر دين أعداء الإسلام ، ومشاقة واضحة لكتاب الله عز وجل وسنة رسوله – ﷺ – وعدم القناعة بهما وبما فيهما من النور (السيف المسلول على بدعة الاحتفال بالرسول أبو ربيع محسن بن عوض بن أحمد القليصي الهاشمي )

இந்தப் புதுமைகள், வெறுக்கத்தக்க பித்அத்துகள் யாவும் இஸ்லாமிய மார்க்கத்தின் விரோதிகளின் சமயக் கோட்பாட்டுக்கு சரி நிகரானவைகளாக இருப்பதோடு,

இவை அல்லாஹ்வுடைய வேத்தத்திற்கும் அவனது தூதர் உடைய நடைமுறைக்கும் தெளிவான முரண்பாடாகவும், அவ்விரண்டைக் கொண்டும், அவ்விரண்டிலும் காணப்படும் பிரசாகசத்திலும் மன திருப்தி அடையாமல் இருப்பதாலும் ஏற்பட்டதாகும். (அஸ்ஸைபுல் மஸ்லூல் - அபூ ரபீ.ஃ. முஹ்ஸின்) என்ற அறிஞரின் வார்த்தைகளில் காணப்படும் கருத்துக்கள் யதார்த்தமான உண்மைகளாகும்.

இந்த வழிகேடுகளை ஆதரிக்கும் ஷீஆக்கள் அரச அனுமதியோடு நபித்தோழர்களை நேசிக்கும் இலங்கை சமூகத்தில் தொடர்ந்தும் அரங்கேற்றி வருவதை நம்மால் அவதானிக்க முடிகின்றது.

எனவே இது தொடர்பாக அஹ்லுஸ் ஸுன்னா முஸ்லிம்களாகிய நாம் இயக்க வேறுபாடுகளைக் கழைந்து இந்த வழிகேட்டுக்கெதிராக களம் இறங்கவேண்டிய தேவைப்பாடு இருக்கின்றது.

இந்த நூலில் அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்களின் கொள்கை என்ன? ஷீஆக்கள் மற்றும் வழிகெட்ட சூ.ஃ.பிகளின் கொள்கை கோட்பாடுகள் என்ன? என்பதுபற்றி அல்லாஹ்வின் அருளால் மிகத் துல்லிமாயக விளக்கப்பட்டுள்ளது. அல்லாஹ்வுக்கே புகழனைத்தும் சொந்தமானது.

الحمد لله الذي بنعمته تتم الصالحات

رَبَّنَا ٱغۡفِرۡ لِي وَلِوَٰلِدَيَّ وَلِلۡمُؤۡمِنِينَ يَوۡمَ يَقُومُ ٱلۡحِسَابُ﴿٤١﴾

﴿ إبراهيم: ٤١ ﴾

அல்லாஹ்வே! எனக்கும் எனது பெற்றோருக்கும் இறைவிசுவாசிகளான மு.்.மின்களுக்கும் கேள்வி கணக்கு நாளில் பாவப் பிழைகளைப் பொறுத்-தருள்வாயாக! *(இப்றாஹீம்: 41)*

என்றும் எமக்காகப் பிரார்த்திப்பீர்கள் என்ற நம்பிக்கையோடும் பிரார்த்தனையோடும் விடை பெறும் உங்கள் சகோதரன்

**எம். ஜே. எம். ரிஸ்வான் மதனி (M.A. Cey)**

# உசாத் துணைகள் المراجع


١) القرآن الكريم

٢) المصادر الحديثية ( صحيح البخاري، صحيح مسلم،سنن الترمذي، سنن أبي داود، سنن ابن ماجه ... )

٣) عمدة القاري شرح صحيح البخاري للعيني رحمه الله

٤) شرح النووي على مسلم للإمام النووي رحمه الله

٥) فتح الباري للإمام ابن حجر -رحمه الله

٦) إكمال المعلم شرح صحيح مسلم - للقاضي عياض -رحمه الله

٧) الإنصاف فيما قيل في المولد من الغلو والإجحاف – أبو بكر جابر الجزائري رحمه الله

٨) حكم الاحتفال بالمولد النبوي : إبراهيم بن محمد الحقيل

٩) الجامع في المولد – مجموعة من المؤلفين

١٠) الخطوط العريضة – محب الدين الخطيب- رحمه الله

١١) الشيعة والسنة – إحسان إلهي ظهير رحمه الله

١٢) البداية والنهاية – الإمام ابن كثير- رحمه الله

١٣) اقتضاء الصراط المستقيم – ابن تيمية رحمه الله

١٤) المورد في عمل المولد للفاكهاني - رحمه الله

١٥) فتح الباري - الإمام ابن حجر – رحمه الله

١٦) فوات الوفيات - محمد بن شاكر الكتبي.\ المحقق : إحسان عباس

١٧) إحياء علوم الدين - الإمام أبو حامد الغزالي رحمه الله

١٨) كتاب الاعتصام العلامة أبو إسحاق إبراهيم بن موسى الشاطبي

١٩) تيسير العزيز الحميد – الشيخ سليمان آل الشيخ –رحمه الله

٢٠) سيرة أمير المؤمنين علي بن أبي طالب – دا\ علي محمد الصلابي

٢١) التأدب مع الرسول في ضوء الكتاب والسنة -تأليف : حسن نور حسن

٢٢) الأوهام الواقعة في أسماء العلماء والأعلام -

٢٣) شرح سنن أبي داود - الشيخ\عبد المحسن العباد

٢٤) أحاديث في ذم الكلام وأهله\ أبو الفضل المقرئ

٢٥) بحر الفوائد\ الإمام الكلاباذي رحمه الله

٢٦) شرح صحيح البخاري\ الشيخ أبو إسحق الحويني

٢٧) السلوك لمعرفة دول الملوك / أبو العباس أحمد بن علي بن عبد القادر، الحسيني العبيدي، تقي الدين المقريزي

٢٨) إنباء الغمر بأبناء العمر في التاريخ \ الإمام / شهاب الدين أبي الفضل أحمد بن علي بن حجر العسقلاني

٢٩) الأعلام - خير الدين بن محمود بن محمد بن علي بن فارس، الزركلي الدمشقي

٣٠) موازين الصوفية في ضوء الكتاب والسنة - سعيد عبد الرحمن الندى

٣١) التوضيحات الجلية، لأبيات البردة المردية فضيلة الشيخ: أبي أويس محمد بوخبزة الحسني

٣٢) الحكومة الإسلامية – الخميني الهالك

٣٣) سبحان مولد

٣٤) المكتبة الشاملة